ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் துணை



பிள்ளையார்குப்பம் – திருவார்திரு.

# அருட்சக்தி அன்னை வரலாறு

ஸ்ரீலஸ்ரீ அருள்சக்தி அன்னை

எழுதியவர் :

வித்துவான் : சு. மங்கையர்க்கரசி

பாலகவி : வேங்கடராமன்

வெளியிடுவோர் :

ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் சங்கம்

மோட்சம் ஏறுவதற்குப் பத்துப்படிகள் இருக்கின்றன. ஒரே ஜென்மத்தில் பத்துப் படியும் ஏற்றுவித்துப் பதவிக்குக் கொண்டு போகிறவர் நமது குருநாதர். அதற்குக் காரணம்: வந்த வினையை அனுபவித்துவிடு. மருந்தை அருந்தித் தடுக்காதே. பிரார்த்தனையிருந்தால் செலுத்திவிடு. இனி பிரார்த்தனை செய்துகொள்ளாதே. அவைகள் பிறவிக்கு இடம் தரும் என்றார்கள். எதற்கும் குற்றங்கள் செய்ய வொட்டாமல் தடுத்தாட்கொள்வது நம் ஆண்டவரின் உத்தமமான வழி ஒன்று தான் ஆண்டவர் காட்டும் வழியைப் பிடித்து நடந்தால் மோட்சத்திற்கு அதுவே சூக்ஷமமான வழி.



ஆண்டவர் நெருப்பு ஆகையால் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும் எனத் தெரிந்து கொள்ள வேண்டும். எவ்வளவு சிரமத்தை பொறுத்துக் கொண்டு இருக்கிறோமோ, அவ்வளவும் பிறகு நன்மையாக இருக்க முடியும்.



எதிலும் ஆடம்பரம் கூடாது. சுவாமிகள் செல்லுமிடமெல்லாம் ஆடம்பரம் உதவாது என்று தடுத்து விட்டார்கள்.



சகிப்புத்தன்மை இருந்தால் அனைத்தும் கை கூடிவிடும்.



ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் துணை

பிள்ளையார்குப்பம் - திருவார்திரு.

# அருட்சக்தி அன்னை வரலாறு



ஆசிரியர்கள் :

வித்துவான் : சு. மங்கையர்க்கரசி

பாலகவி : வேங்கடராமன்

வெளியிடுவோர் :

ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் சங்கம்



ரூ. 40.00

முதற் பதிப்பு : 1980 இரண்டாம் பதிப்பு : 2000

இந்நூல் கிடைக்குமிடங்கள் :

**ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் சங்கம்**
இரெட்டியப்பட்டி, நாகலாபுரம் அஞ்சல்
தூத்துக்குடி மாவட்டம்
628 904

**அருட்சக்தி அன்னை பதிப்பகம்**
20, கோபால கிருஷ்ணன் சாலை,
தி. நகர், சென்னை - 600 017.
தொலைபேசி : 8280528, 8224902, 8280470

**சற்குருதாசன் டிரஸ்ட்**
23, நிமந்தகார ஒற்றைவாடை தெரு,
பெரிய காஞ்சிபுரம் - 631 502.
தொலைபேசி : 04113 - 25772

**ஸ்ரீ அருட்சக்தி அன்னை சந்நிதானம்**
பிள்ளையார்குப்பம் அஞ்சல்,
(வழி) பாகூர், பாண்டிச்சேரி மாநிலம்,
607 402.

## முன்னுரை

செந்தமிழ் விளக்க வள்ளலார், ஆட்சி மொழிக் காவலர்,
தமிழ்ச் சுடர், சாந்த சீலர், அருட்பெருந்திரு
கீ. இராமலிங்கனார் எம். ஏ., அவர்கள்

**"விழிப்பு ஊட்டும் விழுப்பொருள்"** என்று போற்ற வேண்டிய பொன்னான நூல் இது. குருபரனார் அருள்திரு. இரெட்டியப்பட்டி அடிகளார் அவர்கள், இவ்வுலகில் அருள் வாழ்வு வாழ்வதற்கு வழி காட்டும் வான் பொருளாக விளங்கினார்கள். அவர்களுடைய வரலாற்றையும் கொள்கைகளையும் விரித்துரைக்கும் நூல் **'வழி காட்டும் வான்பொருள்'** எனப்பெற்றது. அந்த அருட்பெருந்தகையார் வகுத்து அளித்த அருட்சட்ட நெறியான, விழுமிய, அதாவது, மிக உயர்ந்த நெறியைப் பின்பற்றுவதிலேயே விழிப்பாக இருக்குமாறு, ஊக்கம் ஊட்டிய, அருள் தவத்திரு அம்மையார் அவர்களே அருட் சக்தி அன்னையார் அவர்கள்.

இளமையிலேயே குருநாதருடைய அருளைப் பெற்றவர்கள். மற்ற அடியார்களுக்குக் குறைகள் நேர்ந்தபோது, குரு பெருமானார், அருட்சக்தித்தாய் அவர்களின் வழியாகவே, அக்குறைகளைப் போக்குவதற்கான நெறி முறைகளை, அடியவர்கள் அறிந்து, அவற்றின்படி நடக்கச் சொல்லியருளுவது வழக்கம். ஊனக்கண்ணுக்குப் புலனாகாதபடி குருதேவர் திருக்காப்பிட்டுக் கொண்ட பிறகு, சட்டத் திருநெறியில் அடியார்கள் விழிப்பாக ஒழுகி வருமாறு அருள் பாலித்து வந்த தனித் தலைமை அருள் தவத்தாய், கண்கண்ட தெய்வமாக விளங்கினார்கள். நேரில்

சேவித்து அறிந்தும், கடிதம் வழியாகத் தெரிந்தும், அடியவர்கள் அன்னையாரின் அருள்வள ஆட்சிக்கு ஆட்பட்டுப் பெருநலம் பூண்டு வாழ்ந்து வந்தார்கள்.

1936 ஆம் ஆண்டில் திருச்சாத்தனூரில், முதல் அருட்கொடி யேற்று விழாவில், முதன் முதல் சேவித்தது முதற்கொண்டு, என்பால் என்றும் பரிவு உடையவர்களாக இருந்தார்கள். என்னிடம் இருந்த குறைகள் அவர்கள் கண்களில் படுவதே இல்லை. அடியவர்கள் பலரில், எனக்குத் தனியிடம் அளித்து அருள் புரிந்து வந்தார்கள். சட்டநெறி பற்றிய நுணுக்கங்களையும், அவர்களுடைய வாழ்க்கைக் குறிப்புகளையும் அவர்கள் கைப்பட எனக்கு எழுதியிருக்கிறார்கள். அவற்றையெல்லாம், இந்நூலில் பயன்படுத்திக் கொள்ளச் செய்திருக்கிறேன். அருள் சிந்தனையால், தம் உணர்வில் தோன்றிய, பல அரிய கருத்துக்களையும் இந்நூலாசிரியர்கள், இவ்வரலாற்றில் இடைமிடைந்து, இலங்க வைத்திருக்கின்றார்கள்.

இந்த நூல், பழைய அடியவர்களுக்கு மட்டுமேயன்றி, புதிதாகச் சேர்கின்ற, புதிதாகச் சேர விரும்பும் அடியார்கள் பலர்க்கும், சட்ட நெறியில் நிலை நிற்பதற்கு வழிகாட்டிக்கொண்டு, அவ் அருள் நெறி நிலை மாறாமல் விளங்க விழிப்பாக இருந்து வருமாறு செய்யும் விழுமிய அருள் நூலாகும். திருவார் திரு. அருட்சக்தி அன்னையார் அவர்கள் இந்நூலின் வழியாக மறைந்திருந்து அடியவர்களை அருள் ஆட்சி புரிந்து வருவார்கள். அவர்களை நேரில் சேவித்துப் பெறக்கூடிய பயன்களை, இனி இந்த நன்னூலின் வடிவிலிருந்து, அவர்கள் அடியவர்களுக்கு வழங்கி அருள்வார்கள். அருள் வடிவான அன்னையாரைப் போற்றுவது போன்றே இந்நூலைப் போற்றி வரவேண்டும்.

அன்னை பெருந்தகையார் திருவுருக்கரந்த சில நாட்களுக்குள்ளேயே இந்நூலை விரைந்து வரைவதற்கு முற்பட்ட காஞ்சி அருள் ஞானத்தாய் – சு. மங்கையர்க்கரசியார் அவர்களுக்கும், ஆண்டவரின் வழிபாட்டிற்குரிய தமிழ் ஆகமங்களை வரைந்து உதவியுள்ள தவத்திரு. பாலகவி. வேங்கடராமன் அவர்களுக்கும் அடியவர்களின் நன்றி பெரிதும் உரியதாகும். இதனை அச்சிடுவதற்கான தொகையை அன்பின் காணிக்கையாக வழங்க முன்வந்த அடியவர் பெருமக்களுக்கும், அடியவர்கள் மிகவும் நன்றியுடையவர்கள் ஆவார்கள். இந்நூல் அடியவர்கள் ஒவ்வொருவர் கையிலும் இருக்க வேண்டும். அன்றாட வாழ்க்கையில் விழிப்பூட்டிக் கொள்ளும் வகையில் வழிபாட்டு நேரத்தில் ஓதப்பெற்று வர வேண்டும் என்பது எனது வேண்டுகோள்.

"தமிழ்மணம்"
சென்னை - 30.

**கீ. இராமலிங்கம்**
**14-9-1980.**





# அணிந்துரை

(ஸ்ரீ வைஷ்ணவ ப்ரபந்த வித்வான், வி. புதூர்-அருள்திரு.
கி. வேங்கடசாமி ரெட்டியார் அவர்கள்)

"நல்லாரைக் காண்பதுவும் நன்றே: நலமிக்க
நல்லார்சொல் கேட்பதுவும் நன்றே: நல்லார்
குணங்கள் உரைப்பதுவும் நன்றே: - அவரோ(டு)
இணங்கி இருப்பதுவும் நன்று."

"நல்லார்" யார்? கசடறக் கற்றவர் நல்லார் எனலாம். இல்லை - கற்பது போதாது: கற்றபடி நிற்றல் வேண்டும். கற்றதன் பயன் வாலறிவன் ஆகிய இறைவன் 'நற்றாளைத் தொழுவதேயாம்' அங்ஙனம் இறைவன் நற்றாளைத் தொழாதவர்கள் கற்றவர்களேயாயினும், கல்லாதவரேயாவர்.

"ஓதியும் உணரமாட்டேன்: உன்னையுள் வைக்க மாட்டேன்" என்ற தன் நிலைக்கு இரங்கிக் கசிந்துருகாத வர்கள் கல்லாரே யாவர்.

இதனால் **கல்லார்** என்பதன் மறுதலைச் சொல்லாக கற்றார் என்னாது. **நல்லார்** என்று முன்னோர் உரைத்தனர்.

இதனை, "நல்லார்கட் பட்ட வறுமையின் இன்னாதே
கல்லார்கட் பட்ட திரு"

எனும் திருக்குறளின் அமைப்பால் உணரலாம்.

மேலும் 'படித்தவர்' என்று ஒருவரைச் சொல்லும் போது வன்மை மிகுதலையும், 'படிந்தவர்' என்னும் போது, வன்மை யின் அழுத்தமின்றி மென்மை மிகுதலையும் காணலாம்.

மென்மை மிக்கவர்களே நல்லார் என்றும், மெல்லியலார் என்றும் மேன்மக்களால் போற்றப் படுவார்கள்.

அத்துணை நல்லாருள் ஒருவரின் வாழ்க்கை வரலாறே இந்நூல்: இதனால் அறியப்பெறும் நல்லார் ஒரு மெல்லியலாரே என அறிய உள்ளம் புளகிதமடைகின்றது.

'கண்ட குலத்தைக் கருதின் இரெட்டியெனும்

பண்டகுலம்' என்று கற்பனைக் களஞ்சியமான சிவப்பிரகாச சுவாமிகளால் பாராட்டப் பெற்ற பண்டகுலத்தில் தோன்றிச் சிறந்து வாழ்ந்தவர் இவ்வம்மையார். தூயவெள்ளாடை, மெல்லிய உருவம், புன்னகை பொலியும் திருமுகம், இனியகுரல், கண்டாரைப் பிணிக்கும் தோற்றம் இவையே இவர் நல்லார் என்பதற்குரிய அடையாளம்.

மருந்தினையே நினையாது, இயற்கை வாழ்வு வாழ்வதற்கேற்ற வகையில் 'அருள்நெறிச் சட்டம்' வகுத்தருளிய பெரியார் இரெட்டியப்பட்டி சுவாமிகள் என்பதனை எல்லோரும் அறிவர். அவர்தம் சட்ட ஒழுங்கில் நிலைபெற்று இன்புறுவோர்கள் அளவற்றவர் ஆவர்.

இவ்வம்மையார் அச்சுவாமிகளின் முதன்மைச்சீடர். சட்டநெறி நிற்கின்ற அடியார்கட்கு வாழ்க்கையில் நேரும் சில இன்னல்கட்குச் சட்டநெறிக்குட்பட்ட அறிவுரை வழங்கியும், ஐயங்களை நீக்கித் தெளிவுபடுத்தியும், அருள்நெறியில் முன்னேற ஊக்கியும், அரும்பெருந் துணையாய்க் கலங்கரை விளக்கமாய்த் திகழ்ந்தவர்.

இல்லறத்திலிருந்து கொண்டே, கடுந்தவம் ஆற்றி கரையேற முடியும் என்பதற்கு இவர்களது அருள் வாழ்க்கை ஒரு எடுத்துக் காட்டாக அமைந்தது.

கோதைப் பிராட்டியார் கண்ணபிரானை அடைந்தது போல, இவர்கள் குருபரனார் வகுத்த அருள்நெறியை அணுவளவும் வழுவாது பேணி, மாதவம் புரிந்து, அவர் தம் மாணடி மலரிற் கலந்து பிறவிப் பெரும் பயன் பெற்றனர் என்பது, மக்கள் குலம் போற்றத்தக்க மாண்புடையதாகும். இவர்தம் வாழ்க்கை வரலாறு அன்பர்கட்கு வழிகாட்டியாக விளங்கும் என்பதில் ஐயமில்லை.

இவ்வரலாற்றைச் சீரிய முறையில் எழுதித் தந்தவர் கச்சியம்பதியில் வாழ்பவர், தமிழ்ப் புலமை மிக்கவர். அருள்நெறிச் சட்டத்தில் திளைத்தவர். சு. **மங்கையர்க் கரசியார்** என்னும் பெயரினர். இவரும் சட்டநெறி நிற்கும் அடியார்கட்குப் பெருந்துணையாய் இருப்பவர். நல்லுரை வழங்குபவர். நல்லார் எனற்குரிய முழுத்தகுதியும் பெற்றவர்.

இவர் இந்நூலை எழுத இவர்க்கு உதவியாயிருந்தவர் இக்குரபரனார் அருட்சட்ட அடியாரான, என் ஆத்ம நண்பர், **பாலகவி** திரு. வேங்கடராமன் அவர்கள் ஆவர்.

இவர்கள் இருவரும் எல்லா நலனும் பெற்று இன்புற்று நீடுவாழ குருநாதர் அருள்புரிவாராக!

வெண்பா

நன்னா வலர்புகழும் நாயகியார் தாயனையார்
சொன்னரம்பாள் என்றுரைக்கும் தூநெறியார் - எந்நாளும்
இன்பமிகு சட்டநெறி யேற்றார்தம் பாதமலர்
துன்ப மெலாம்தீரத் துதி.

வி. புதூர் P.O. (வழி) வளவனூர்,
விழுப்புரம் R.M.S.

இங்ஙனம்,
**கி. வேங்கடசாமி.**

# முகவுரை

"வாராய் கண்மணியே - என்னருகினில்
வாராய்" என்றும்,
"சக்திகளொடும் கூடித் தரணியை ஆளவந்த
வேடிக்கை பாராய்"

என்றும், கூறிய பாடல்கள் கருத்தின்படி, பரப்பிரம்மமாகிய இறைவன் சக்தியோடு கூடி, இவ்வுலகை நடத்துவது போல, மானிட ரூபம் கொண்டு வந்த கணேசரின் அவதாரமாம் ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள், சித்தி, புத்தி, வல்லபை, விஷ்ணுவின் மகளிர் பன்னிருவர் போன்ற பல சக்திகளை ஆங்காங்கு அவதாரம் செய்ய வைத்தனர். அவர்களுள், வல்லபையின் அவதாரமாக விளங்குபவரே ஸ்ரீலஸ்ரீ அருட்சக்தி அன்னையார் ஆவார்கள். இதற்குச் சான்று, பல அடியார்களிடம் நிகழ்ந்த நிகழ்ச்சியும், ஸ்ரீலஸ்ரீ தாய் அவர்களிடம் நிகழ்ந்த நிகழ்ச்சியுமாகும்.

ஆயிரக்கணக்கான குடும்பங்களுக்கு வழிகாட்டும் தலைவியாக, அருள்நெறி உணர்த்தும் ஆசிரியையாக, பிணியெலாம் நீக்கும் பெருமாட்டியாக, திகைப்பினை நீக்கித் தெளிவு தரும் தெய்வ மணியாக, அடியார்கள் நலத்துக்காக ஆண்டவரிடம் முறையிடும் அரும் பெருந் துணையாக, பார்வையால் பாவம் போக்கும் பண்பினராக, பக்குவத்திற் கேற்றபடி அருளுணவும், உடலுணவும் தந்து பேணும் அற்புதத் தாயாக விளங்கி அருளாட்சி புரிந்து வரும் நம் அருட்சக்தி அன்னை அவர்களின் அருள் வரலாற்றினை அருள்துணை கொண்டு எழுதும் மாபெரும் பேறு அடியேங்கட்குக் கிடைத்தமை பற்றி இதய பூர்வமாக எண்ணி எண்ணி இன்புறுகின்றோம்.

இவ் அருள் திருப்பணியை ஆற்றுதற்குத் தகுதி மிக உடைய பெருந்தகையார் பலர் இருக்க, அடியேங்கட்கு இத்தொண்டினை அருளவேண்டும் எனத் திருவுளம் பற்றிய குருபெருமானாரின் பேரருளுக்கும், அருட்சக்தி அன்னை அவர்களின் தனிப்பெருங் கருணைக்கும் என்றென்றும் கடமைப்பட்டுள்ளோம்.

திருவார்திரு அருட்சக்தி அன்னை அவர்கள் அருள் வரலாற்றின் சிறப்பினை உள்ளபடி உரைக்க ஆயிரம் நாவுடைய ஆதிசேடனாலும் இயலாதெனக் கூறலாம்.

அன்னை அவர்களின் அருள் வரலாறாம் அமுதப் பெருங் கடலுள் திருவருள் துணையால் கிடைக்கும் சில துளிகளை இங்கு அடியவர், அன்பர்கள், அருளாளர்கள் திருமுன் வரைந்து வைக்கின்றோம்.

அன்னை அவர்களின் அருள் உபதேசங்களும், அருள் விளக்கங்களும் எண்ணிலடங்கா. அவற்றுள் ஒரு சில மணிகளைத் தலைப்பிட்டும், மற்றும் சில மணிகளை ஆங்காங்கு உள்ள இடத்திற்கேற்ப நாற்கோடிட்ட கட்டத்துள் அமைத்தும் தந்துள்ளோம்.

அன்னை அவர்கள் அருள் அமைவு பெற்ற மூன்றாம் நாளே இந்நூலை வெளியிடக் கருதி இந்நற்றொண்டிற்கு எங்களை ஊக்கி அச்சேற்றும் பொருட்டுப் பொருளும் தந்து. செயற்பட அருளிய ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் சங்கத்தினர்க்கும், அன்னை அவர்களின் அருள் திருக்கரங்களால் வரையப்பெற்றுத் தம்மிடமிருந்த குறிப்புக்களைத் தந்தும், இந்நூலைத் தொடங்கித் தந்தும் இந்நூல் செம்மையான முறையில் விரைவில் வெளிவரல் வேண்டும் என அருளாசிகள் வழங்கியும், சிறப்பானதொரு முன்னுரை எழுதியனுப்பியும்

உதவிய அருள் ஞானச் செம்மலான செந்தமிழ் விளக்க வள்ளலார், **அருட்பெருந்திரு கீ. இராமலிங்கனார்** அவர்களுக்கும், எங்கள் அன்பார்ந்த வேண்டுகோளுக் கிணங்கி இனியதொரு அணிந்துரை எழுதியனுப்பிய ஸ்ரீ வைஷ்ணவப்ரபந்த வித்வான் வி. புதூர், உயர் அருள் திரு. கி. வேங்கடசாமி ரெட்டியார் அவர்களுக்கும், இந்நூலை இனிய முறையில் மிகக் குறைந்த காலத்தில் அன்புடன் அச்சிட்டுதவிய காஞ்சிபுரம் **துரை அச்சகத்தினருக்கும்** எங்களின் உளம் கனிந்த நன்றி என்றும் உரியதாகும். இந்நூலை வாசிக்கும் புண்ணியமுடையோர் இந்நூலைப் பொன்போல் போற்றிப் பயின்று அருள்நலம் பெறுமாறும், குறைகள் இருப்பின் எங்களைப் பொறுத் தருளுமாறும், மிக மிகப் பணிவுடனும் கேட்டுக்கொள்கின்றோம்.

வாழ்க குருபரனார் பேரருள்!

வாழ்க அருளன்னை பெருங்கருணை!!

ஆண்டவர் அருள்

**சு. மங்கையர்க்கரசி மி. கே. வேங்கடராமன்**

*17–9–1980*





ஓம் ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் துணை

# பதிப்புரை

பூவுலகில் வாழும் உயிர்கள் முத்திப் பேறடைய வழிகாட்டிய ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகளின் தலை சிறந்த சீடராக விளங்கியவரும் அடியார்களுக்கு அன்றும், இன்றும், என்றும் அருள்வழிகாட்டும் அருள்சக்தி அன்னையாகவும் விளங்கிவரும் பிள்ளையார்குப்பம் திருவார் திரு. அருட்சக்தி அன்னை அவர்கள் வரலாறு 1980 ஆம் ஆண்டு முதல் பதிப்பு வெளியாயிற்று. அதன் மூலம் பல அரிய, பெரிய உண்மைகளையும், திருவார். திரு. அருள்சக்தி அன்னை அவர்களின் அளவற்ற பெருமைகளையும், சித்துக்களையும் அருட்சட்ட அடியார் உலகம் அறிந்து போற்றி தலைவணங்கி வாழ்த்தினர்.

தற்போது திருவார் திரு. அருட்சக்தி அன்னை வரலாறு என்னும் நூல் கைவசம் தீர்ந்தமையால் மீண்டும் கி.பி. 2000ஆம் ஆண்டு பதிப்பிக்க மாம்பலம் தவத்திரு. சாம்பசிவ ஐயர் குடும்பத்தினர் பொருளுதவி செய்தனர். அவர்களுக்கும், நல்ல முறையில் அச்சிட்டுத் தந்த எவரெடி அச்சகத்தினர்க்கும் என் உளங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

இந்நூலைப் போற்றிப் படித்துப்பயன் பெற வேண்டும் என அருட்சட்ட அடியார்களையும், மற்றும் ஆன்மீக அன்பர்களையும் வேண்டிக்கொள்கின்றேன்.

அன்பு தழைத்து அருள்வளம் பெருகுக !!

ஆண்டவர் அருள்,
சு. மங்கையர்கரசி
27-7-2000

## உள்ளுரை



## ஆனந்த நிலையில் தோய்ந்திடுவோம்

சக்திசக்தி சக்தியென்று பாடிடுவோமே - சீலம்
பக்தி யுண்மை ஞானமெய்த நாடிடுவோமே
சித்திநகர்ச் சக்திபாதம் போற்றிடுவோமே - மேலாம்
தெய்வசக்தி பெற்று நாமும் தேர்ந்திடுவோமே

அன்புகொண்டு சற்குருதாள் ஏத்திடுவோமே - என்றும்
அருட்சட்ட மார்க்கம் நன்று போற்றிடுவோமே
துன்பமெல்லாம் தீரஒன்றாய்க் கூடிடுவோமே - மதுரைத்
தூயபரி பூர்ணர் அருள் பேணிடுவோமே

ஏகநெறி வாழ்கவென்று பாடிடுவோமே - புவிமேல்
எங்கடியர் உள்ளாரென்று தேடிடுவோமே
போகநலம் போதவளம் எய்திடுவோமே - சிவ
புண்ணியப் பணிகள் பல செய்திடுவோமே

மோன நலமெய்த நிட்டை கூடிடுவோமே - ஜீவன்
முத்தர் குழாம் வாழ்கவென்று பாடிடுவோமே
வானவர் முனிவர் வாழ்த்த வாழ்ந்திடுவோமே - அருளால்
ஆனந்த நிலையில் என்றும் தோய்ந்திடுவோமே.



ஸ்ரீ இரெட்டியப்பட்டி ஸ்வாமிகள்



ஸ்ரீ இரட்டியப்பட்டி சுவாமிகள் துணை

பிள்ளையார்குப்பம் - திருவார்திரு

# அருட்சக்தி அன்னை வரலாறு

## விநாயகர் துதி

*ஐந்து கரத்தாய்! அறுமுகற்கு நேர்மூத்தாய்!*
*முந்த உதித்த முதல்வா! என்-சிந்தை*
*குடியிருந்தே காக்கும் கோமான்! உனையான்*
*அடிதொழுதேன் வந்தென்னை ஆள்.*

*மதுரா புரிவடக்காய், வைகைநதித் தென்பால்,*
*சதுரார் ரயில்பாலம் தன்மேற்காய், எங்கும்*
*கதித்தோங்கும் செந்நெல்சூழ் கட்டிடத்தின் கீழ்பால்*
*உதித்தாய்! என் உள்ளத் துறை.*

## குருநாதர் துதி

கருத்தினுக் கெட்டாக் கடவுளே உலகில்
கலந்திடும் அடியரைக் காப்பான்
உருக்கொடு வருவர் எனப்பல நூல்கள்
உரைப்பன உண்மையென்(று) அடியேம்
தெரிந்திடத் தவர்சூழ் இரெட்டியப்பட்டித்
திருத்தலம் செழிக்கவந் திடுவோய்
விரிந்திடும் எங்கள் மனம்மிக வொடுங்க
வெளிவரு குருபரா போற்றி.



ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் துணை

அருட்சக்தி அன்னை வரலாறு

# I என்றும் வழிகாட்டும் எந்தை குருநாதர்

## 1. குருநாதர் தோற்றமும், தவமும்

உலகம் தோன்றிய நாள் முதல் உலகின்பல பாகங்களிலும், பல காலங்களிலும் அருளாளர் பலர்தோன்றி அருள் நெறி கண்டு இன்பம் அடைந்துள்ளனர். தாம் பெற்ற பேரின்பத்தைப் பலரும் பெறவேண்டும் எனக் கருதியுள்ளனர்; முயன்றுள்ளனர்; எழுதி வைத்தும் உள்ளனர். அவர்கள் அனைவரின் கருத்தும் செயல்முறையில் நிறைவேற எல்லாம் வல்ல பரம்பொருளின் அருட்பெருங்கருணையே ஒருருத் தாங்கி உலகின் கண் அவதரித்ததைப் போன்று, செந்தமிழ் நாட்டில், திருநெல்வேலி மாவட்டத்தில், கோவில்பட்டிக்கு சுமார் 50 கிலோ மீட்டர் தொலைவில் உள்ள நாகலாபுரத்தை அடுத்து உள்ள *இரெட்டியப்பட்டி என வழங்கும் இருடியர் பட்டித் திருத்தலத்தில் (கி.பி. 1856-ல்) நள ஆண்டு புரட்டாசி மாதம் இரேவதி நன்னாளில் சைவ வேளாள மரபில் சுவாமிகள் 'சுப்ரமண்யம்' என்ற பிள்ளையாக தோன்றியருளினார்கள். அங்கிருந்த ஒரு திண்ணைப் பள்ளிக்கூடத்தில் எழுதப்படிக்கக் கற்றுக்

*மதுரையிலிருந்து, அருப்புக்கோட்டை விளாத்திகுளம் மார்க்கத்தில் புதூர் நாகலாபுரம் வழியாக சுமார் 72 கிலோ மீட்டர் சென்றாலும் இவ்வூரை அடையலாம். (பஸ் வசதி உள்ளது.)

கொண்டனர். குலத்தொழிலாகிய விவசாயத்தில் ஈடுபட்டனர். நிலம் பன்மடங்கு விளைவைத் தந்தது. அத்தருணம் அவ்வூர் ஏழை மக்கள் அன்றாட வாழ்க்கைக்குத் தேவையான பொருள்களை அதிக விலை கொடுத்து வாங்குவதைக் கண்டு வருந்தி தூத்துக்குடிக்கு வண்டி கட்டிச் சென்று, சரக்குகள் வாங்கிவந்து கொள் விலைக்கே விற்று, ஏழை மக்கட்கு உதவினர். இவர் செயல் வீட்டில் உள்ளார்க்கு வருத்தந் தந்தது. எனவே இவர் மதுரைக்குச் சென்று ஒரு முகம்மதியர் கடையில் கணக்குப் பிள்ளையாய் அமர்ந்தனர்.

நாள்தோறும் விடியல் மூன்றுமணிக்கு எழுந்து வைகை நதிக்கேகி, 4 மணிக்குள் நீராடி, முன்னவனார் வழிபாடு செய்துவந்தனர். சர்வஜித்து ஆண்டிலே ஒரு நாள் வழக்கம்போல் நீராடி முடிந்ததும், ஒரு சிறந்த அருட்ஜோதி கண்டு அருகே செல்கையில் அது ஒரு விநாயகர் போன்று ஜொலிக்க, சுவாமிகள் ஆனந்த பாஷ்பம் சொரியச் சொல்லொணாப் பெருமகிழ்வுடன் ஆலிங்கனம் செய்து கொண்ட போது, அது ஒரு விநாயகர் சிலையாக மாறியதைக் கண்டு, பேரானந்தமுற்று அம்மூர்த்தியை எடுத்து, ஒருமேடை மீது அமர்த்தி '**பரி பூரண விநாயகர்**' எனத் திருநாமம் சூட்டி, நீராட்டி, மலர் சூட்டி, தூபதீபம் காட்டி, நைவேத்தியம் செய்து வழிபாடு ஆற்றினர். அன்பர்கள் பலரும் இந்த அருட்செய்தி அறிந்து, அங்ஙனே அம் மூர்த்திக்கு ஒரு *திருக்கோயில் அமைத்தனர். சுவாமிகள் நாள்தோறும் அம்மூர்த்திக்கு வழிபாடு ஆற்றி வந்தனர். அன்பர்கள் கூட்டம் நிறையவந்து கோரிய பயன்களைப் பெற்றும் குறைகள் நீங்கப் பெற்றும், கை மேல் பலன் கண்டு களிமிகக் கொண்டு வழிபடலாயினர்.

*இத்திருக்கோயில் மதுரை மாநகரில், வைகைநதியின் தென்கரையில், ரயில் வண்டி செல்லும் பாலத்திற்கு மேற்கில் கிழக்கு நோக்கியதாக அமைந்துள்ளது. நித்திய பூஜை நடந்து வருகிறது.

சுவாமிகள் பின்னர் வியாபார நிமித்தம் கடைக்கு உரியவர்களின் கருத்தின்படி சில காலம் பம்பாய் சென்று தங்க நேர்ந்தது. அங்கும் தம் தினசரி ஒழுக்கத்தை முறையுடன் போற்றி வந்தனர். அங்கு இருந்து திரும்புகையில் வட இந்தியாவிலும், சென்னை மாநகர் போன்ற நகரங்களிலும் உள்ள கிறிஸ்துவப் பாதிரியார்களுடனும், அரசாங்க அலுவலர்களுடனும் அளவளாவ நேர்ந்தபோது கிறிஸ்துவ சமய உண்மைகளையும், கொள்கைகளையும் அரசாங்க சட்ட அமைப்புகளையும் உணர நேர்ந்தது. ஏற்கனவே கடைக்கு உரியவர்களோடு தொடர்பு கொண்டிருந்து இந்துஸ்தானி மொழித் திறமையும், இஸ்லாம் மதத்தின் கொள்கைகள், குரானில் உள்ள சிறந்த உண்மைகள், உயர்ந்த கருத்துகள் முதலியனவும் அவர்கள் உள்ளத்தே அமைந்திருந்தன. எல்லா மதங்களின் சிறந்த உண்மைகளும், உயர்ந்த கருத்துகளும் முடிவாக ஒரே பேருண்மையை விளக்கும் அற்புதம் அறிந்து, அனைத்துயிரும் இப் பேருண்மையைக் கடைப்பிடித்துப் பேரின்பமடைய எளிய வழியொன்று இருத்தல் வேண்டும் என அவரது திருவுள்ளம் எண்ணியவாறே இருந்தது.

வட நாட்டிலிருந்து மதுரை திரும்பிய சுவாமிகள் வைகை நதியில் நீராடி வழக்கம் போல வழிபாடு தொடங்கியது கண்ட அன்பர்கள் ஆனந்தமுற்றுக் கூடலாயினர். அடியவர் கூட்டம் பெருகி வந்தது. ஆனால் சுவாமிகள் அக முக நோக்கில் அதிகமாக ஈடுபட லானார்கள். ஒருநாள் வழக்கம்போல் கடையில் நிட்டையில் அமர்ந்த சுவாமிகள் சில நாட்கள் எழுந்திருக்கவே இல்லை. ஒரு நாள் எழுந்து குற்றாலம் சேர்ந்து, சண்பகமாதேவி அருவிக்கருகில் உள்ள ஒரு குகையுட் சென்று நிட்டையில் ஆழ்ந்தனர். பொதிகை மாமலையில் பல ஆண்டுகள் கடுந்தவம் புரிந்து பிறவிப் பெரும் பயன் பெற்றனர். தாம் பெற்ற பேரின்பத்தை

எல்லா நாட்டினரும், எல்லா மொழியினரும், எல்லா இனத்தவரும், எக்காலத்திலும் எவ்விதத் தடையுமின்றி, எவ்வித வேறுபாடுமின்றி எளிய முறையில் பெற்றுய்ய வேண்டும் என்ற பெருங் கருணையுடன் 'சட்டம்' என்ற ஒரு சிறந்த செந்நெறியை வகுத்தருளினர்.

## 2. அருட் சட்டம்

1. ஒவ்வொரு நாளும் விடியற்காலை 4 மணிக்குமேல் 5 மணிக்குள் பச்சை நீரில் முழுக வேண்டும்: தலையும் நனைய நீராடவேண்டும்.

2. குடிக்கவோ, குளிக்கவோ, எக்காரணம் கொண்டும் வெந்நீரைப் பயன்படுத்தலாகாது.

3. நீராடி முடிந்ததும், விநாயகர் கோவிலுக்குச் சென்று மும்முறை வலம் வந்து, மனமுருகி வழிபட்டு வணங்க வேண்டும். (எந்த மதத்தினராயினும், தத்தமக்குரிய வழக்கப்படி வழிபாடு செய்யலாம்.) தண்ணீரில் திருநீறும் துளசியும் இட்டு உள்ளுக்குப் பருக வேண்டும்.

4. உலகெலாம் படைத்துக் காக்கும் ஒரு பரம் பொருளைப் பல மதத்தினர் பல உருவங்களில் வழிபட்டுப் பயனடைகின்றனர்: ஆனால் பரம்பொருள் ஒருவரே என்ற தீர்மானமான எண்ணம் கொள்ள வேண்டும். எந்த மதத்தினையும் நிந்தித்தல் கூடாது.

5. புலாலுண்ணல், பொய் பேசல், கள் குடித்தல் சூதாடுதல், திருடுதல், புகை பிடித்தல், புகையிலை முதலிய லாகிரி வஸ்துக்களைப் பயன்படுத்துதல் பொல்லாரோடு உறவாடுதல் முதலியன ஆகாது.

6. எந்நோய் வரினும், எத்துயர் வரினும் எத்தகைய சிக்கல் ஏற்படினும், ஒரு மருத்துவரையோ ஒரு மனிதரையோ தஞ்சம் என்று அடையாது எல்லாம் வல்ல இறைவனையே தஞ்சம் எனப்பற்றி, உறுதியாக நின்று, உயர் பயன் பெறுதல் வேண்டும்.

7. நோயுற்ற காலங்களில் பச்சை நீரில் இருவேளை முழுகித் திருநீறு பூசி, திருநீறும் துளசியும் இட்ட தீர்த்தம் அருந்தி, மனமுருகி இறையருளை நாடி, அவனருள் துணையால் நோய் நீக்கம் பெற்றுப் பயன் அடைய வேண்டும். விஷக்கடி, வெட்டு ரணம், பிரஸவம் முதலிய எதற்கும் மருத்துவம் நாடாது, திருநீறு, தீர்த்தம் கொண்டே அருட்பயன் காண வேண்டும்.

8. வைத்தியம், ஜோதிடம், மாந்திரிகம் இவைகளை நம்பி ஏமாறாமல், மருந்து, மணி, மந்த்ரம் முதலியன மருவாமல், 'எல்லாம் வல்ல கடவுளே கதி' என்ற பரிபூர்ண நம்பிக்கையோடு, தளராத நெஞ்சத்துடன், இறைவனருள் நாடி அருளாற்றலால் அனைத்து இடுக்கண்களையும் வென்று நற்பயன் பெறுதல் வேண்டும்.

9. இந்தத் தீது அகன்றால், இந்த நன்மை கைகூடினால் இன்னது செய்கிறேன் என்று தெய்வத்திற்குப் பிரார்த்தனை செய்து கொள்ளும் பழக்கத்தை கைவிடுதல் வேண்டும்.

10. வெள்ளிக்கிழமை தோறும் ஒரு வேளையாவது உணவைக் குறைத்துக் கொண்டு, விரதம் இருந்து பயில வேண்டும்.



ஸ்ரீ தாய் அறையில் அமர்ந்து
அடியார்களுக்கு அருள்பாலித்தது - 1979

11. எப்போதும் ஆண்டவர் திருநாமத்தை மனனம் செய்த வண்ணம், உடல் பொருள் ஆவி அனைத்தையும் உடையவனிடம் ஒப்படைத்து, அச்சமும் பற்றும் அணுவளவும் இன்றி, அருள் வாழ்வு வாழப் பழகுதல் வேண்டும்.

12. தினந்தோறும் ஆண்டவர் அருளை வேண்டி, எந்தப் பிற எண்ணமும் இன்றி, அமைதியாக அமர்ந்து, அருள் நிட்டை பேணி, ஆனந்தம் எய்தப் பழக வேண்டும்.

13. சட்ட அனுட்டானத்தில் உள்ளவர்களில் யாருக்காவது உலகில் உலாவும் காலம் முடிந்து உயிர் அடக்கமாக நேர்ந்தால் அதற்காக வருந்தாது, அவர்களின் உடலை எரிக்காது, மண் மறைவு (சமாதி) செய்தல் வேண்டும்.

14. உலக விவகாரங்களில் சிக்கல்கள் நேரும் போது, அறக்கடலாகிய இறைவனின் அருள் துணை நாடி அறமுடிவைப் பெற முயல வேண்டுமேயன்றி, அறமன்றம் நாடி விவகாரங்களை விபரீதமாக வளர்த்துக் கொள்ளுதல் கூடாது.

15. சட்ட நெறியில் ஈடுபட்டுள்ளோர் தவறி நடந்தால், அவர்கட்கு அறிவுறுத்தத் திருவருளால் உடல் உபாதை முதலிய தண்டனை ஏற்படலாம். அவர்கள் உடனே உண்மையை உணர்ந்து, தவறு புரிந்தமைக்கு மன்னித்து அருள் புரியுமாறு இறைவனை உருகி நினைந்து வேண்டிக் கொண்டால், உடனே பரிஹாரம் ஏற்படும். ஏற்பட்ட தண்டனை நிவர்த்தியாகும்.

16. 'வேலைக்கு ஏற்ற கூலி' என்பது போல், எந்த அளவு உறுதியும் ஊக்கமும் கொண்டு கைப்பற்றுகிறோமோ, அந்த அளவுக்குக் கைமேல் பயன் கிட்டுவதையும், தூய நல்வாழ்வு அமைவதையும், இறைவன் அருள் முன்னின்று எல்லா வகைக்கும் வழிகாட்டி அழைத்துச் செல்வதையும், நாம் நன்கு உணர்ந்து அருள் துணை கொண்டு முன்னேறலாகும்.

நோய் நீங்கி, மலங்கள் நீங்கி, உயிர்கள் கரையேற வேண்டுமானால் இந்த வாழ்வு நெறியைக் கடைப்பிடிக்க வேண்டும்.

ஆண்டவர் அருட்சட்டத்தில் ஈடுபட்டிருப்பதையும் அதனால் ஏற்படும் நன்மைகளையும், முன்னேற்றத்தையும் அவர் அருளால் நிகழும் அற்புதங்களையும், பெருமையாகவோ, பிறர் மெச்சிக் கொள்ளவோ, வெளியிட்டுக் கூறுதல் ஆகாது: இரகசியமாக உள்ளத்துள் வைத்துப் போற்றி உய்வு பெறுதல் வேண்டும் எனச் சுவாமிகள் அருளியுள்ளார்கள் என்பது விளங்குகிறது.*

## 3. குருநாதர் திருக்கோயில்

இவ்வாறு மிக உயர்ந்த அருட்பெரு நெறியை மாபெருங் கருணையால் உலகுக்கு வகுத்து வழங்கிய சுவாமிகள் ஆங்காங்கு பக்குவம் பெற்ற அடியார் பலரின் இருப்பிடம் நாடிச் சென்று ஆட்கொண்டு அருள் புரிந்து அவர்களின் நல்வாழ்விற்கு அருந்துணையாய் நின்று ஊக்கி வரலானார்கள். கி.பி. 1923 ஜனவரியில், துந்துபி வருடம் மார்கழி மாதம் 28ந் தேதி வெள்ளிக்கிழமை ஏகாதசி திதி

*சுவாமிகள் வாழ்க்கை வரலாறும் 'அவர் உலகுக்கு வழங்கியுள்ள அருட்சட்ட நெறியின் விவரங்களும் இன்னும் விரிவாகக்காண விரும்புவோர், 'வழிகாட்டும் வான்பொருள்' என்ற நூலில் காணலாம்.

அனுட நன்னாளில் உடையவனோடு இரண்டறக் கலந்தனர். சுவாமிகள் தரைமீது அவதரித்த அதே இடத்தில் அவர்கள் திருமேனி அடக்கம் செய்யப் பெற்று, திருக்கோயில்* அமைக்கப் பெற்றுள்ளது.

உலகினர் கண்ணுக்குத் தோன்றாது மறைந்தருளிய பின்பும் சுவாமிகள் அருட்சட்ட அடியவர்க்கும் அன்பர் கட்கும் என்றென்றும் துணையாயிருந்து அருளாட்சி புரிந்து பேணிவரும் அற்புதத்தை அனைவரும் இன்றும் அறிந்து ஆனந்த முறுவது உண்மையிலும் உண்மை.

நாட்டின் பல பாகங்களிலும், பல இனங்களைச் சார்ந்த பல ஆயிரக்கணக்கான குடும்பத்தினர் மேற்கண்ட சட்ட முறைகளைத் தமது வாழ்க்கையில் கைக்கொண்டு, இம்மை மறுமை நலங்கள் அனைத்தையும் எளிதிற் பெற்று கை மேல் பலன்கண்டு வருவதை இன்றும் கண்கூடாகக் கண்டு. எவரும் கையாண்டு நற்பயன் பெற்றுய்யலாம் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

*இந்த திருக்கோயிலை விரிவாக்கும் திருப்பணி நடந்து முடிந்து, கடந்த 1988ல் இரண்டாவது குடமுழுக்கு நடைந்தேறியது.

விழுப்புரம்–திருச்சி குறுக்குப் பாதையில் திருவெண்ணெய் நல்லூர் புகைவண்டி நிலையத்திற்கு அருகில் உள்ள அருள்நகரில் சுவாமிகளின் பெயரில் சங்கமும், எட்டாம் வகுப்பு வரை பள்ளியும், இலவச மாணவர் விடுதியும் உள்ளன.

சென்னை கோவிந்தப்பநாயக்கன் வீதி எண். 161ல் ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் இலக்கிய பதிகம் செயல்பட்டது. தற்சமயம் சென்னை–20, கோபால கிருஷ்ணன் வீதியில் "அருள்சக்தி அன்னை பதிப்பகம்" என்ற பெயரில் ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் இலக்கியப் பதிப்பகம் உள்ளது.

# II அருட்சக்தி அன்னை அவதாரம்

## 1. குருநெறி காட்டும் அன்னை

இறைவன் குருவடிவில் வந்து ஆண்டு கொண்டால் தான் நாம் உய்ய முடியும். அவ்வப்போது, குருநாட்ட முடையவர்கள் பலராகும் காலத்தில், ஆண்டவன் அருள்திருமேனி பூண்டு உலகத்தில் தோன்றியருளுகிறான். அவ்வாறு தோன்றிய குருபரரே திரு இரெட்டியப்பட்டி சுவாமிகள் ஆவார்கள். அவர்கள் வழியில் அவர்களிடம் அருளும்நெறி பயின்று, தோன்றியருளியவர்களே திரு. அருட்சக்தி அன்னையார் ஆவார்கள். எண்பத்தைந்து ஆண்டுகள் நிலவுலகில் நிலவி, உரியவர்களுக்கு உய்யும் வழியை வகுத்து, அதில் நிலைநிற்கச் செய்து, வழிகாட்டும் வான் பொருளிடம் அணுகும் நெறியை வழிகாட்டியருளிய அருட்பெருந்தகை அன்னையார் அவர்கள் அருள்வாழ்வு வாழ்ந்து காட்டிய செய்திகளை உலக மக்கள் அனைவரும், சிறப்பாக அடியவர்கள் பலரும் அறிந்து உணர வேண்டியவர்கள் ஆவர். அருட்சட்ட நெறியில் நிலைநின்று மேலோங்கி பெறற்கரிய பிறவிப் பெரும்பயனைப் பெறுவதற்கு அன்னை பெருமாட்டியார் அவர்களின் வரலாற்றுச் செய்திகளை யறிந்து போற்றி பயன்படுத்திக் கொள்ள வேண்டியே இந்நூல் அன்னையின் அருட்பாங்கால் எழுதப் பெறுகிறது.

## 2. குலப்பெருமை

தமிழகத்தின் அண்டை நாடான ஆந்திர மாநிலத்தி லிருந்து தண்டமிழ் நாட்டில் வந்து வாழ்ந்தவர்கள் பலர். அத்தகையோருள் இரெட்டியார் என்ற இனத்தவரும் ஒருவர். தமிழ்நாட்டின் கிராமங்களிலும் நகரங்களிலும் இவர்கள்



ஸ்ரீலஸ்ரீ அருள்சக்தி அன்னை

வாழ்ந்து வருகின்றனர். உயிர்க்கு உணவூட்டும் வேளாண் தொழிலில் மேம்பட்டு உயர்ந்தவர்கள். சைவம், வைணவம் ஆகிய இரு சமயங்களையும் சார்ந்தவர்கள். விருந்தினரைப் பேணும் செம்மை சான்றவர்கள். இனிய சொல்லோடு இன்முகமும் கொண்டு பழகும் பண்புமிக்கவர்கள். தம் இல்லங்களில் தனித்தும், கோயில்களில் கூட்டமாகச் சேர்ந்தும், பக்திக் கதைகளைக் கூறச் செய்தும், பஜனை செய்தும் இறையருள் பெற்றுய்பவர்கள். இத்தகு பண்பட்ட இனத்தில் அவதரித்தவரே நம் அருட்சக்தி அன்னையாராவர்.

ஆலாலசுந்தரர், நம்பியாரூரர், தம்பிரான்தோழர் என்றெல்லாம் அருட்பெரியோர்களால் போற்றப்பெறும் ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் இறைவனால் தடுத்தாட் கொள்ளப் பெற்ற திருத்தலமாம் திருவெண்ணெய் நல்லூருக்கு நான்கு மைல் தொலைவில் அருள்வளம், பொருள்வளம் முதலிய அனைத்து வளங்களும் நிறையப் பெற்ற திருச்சாத்தனூர் என்னும் அருட்பதி ஒன்றுள்ளது. அவ்வூரின் கண்ணே ரிஷியாச்ரமம் போன்று ஒரே ஒரு சிறப்பான திருமாளிகை திகழ்கின்றது.

அவ்வெழில் மாளிகையில் வேளாண்மையும், தாளாண்மையும் உடைய திரு இராமலிங்கா ரெட்டியார் இல்லற வாழ்வை இனிது நடத்தி வந்தனர். நல்ல வாசிப்பு, ஆசாரசீலம், சாஸ்த்ர விசாரணை, ஜீவகாருண்யம், தெய்வ பக்தி, பெருந்தன்மை, பிராம்மண விஸ்வாஸம் முதலிய நற்குணங்கள் அனைத்தும் பொருந்தி விளங்கினர்.

### 3. பெற்றோர் பண்பு

அவர் தம் திருமகனாரான முத்து வீரராகவ ரெட்டியாரும், தந்தையாரைப் போலவே எல்லா

விஷயங்களிலும் நிபுணராகவும் ஸதா ராமாயணம் வாசிப்பதும் பிராம்மணர்களைக் கொண்டு பொருள் விளக்கம் கூறச் சொல்வதும், பட்டாபிஷேகம் செய்வதும் பிராம்மண சந்தர்ப்பணை செய்வதும் யாரிடத்திலும் சாத்வீகமாய் பெருந்தன்மையோடு பழகுவதுமாய் விளங்கி வந்தனர். அரசாங்கத்தாரிடமும் அன்போடும் மரியாதை யோடும் இருந்து வந்தனர்.

இவருக்குத் திருவெண்ணெய்நல்லூர் திரு. வெங்கட்ராய ரெட்டியாரின் திருமகளைத் திருமணம் செய்வித்தனர். திரு. முத்துராம ரெட்டியார், திரு. முத்துநாராயண ரெட்டியார் என்னும் இரு குழந்தை களையீன்ற பின்னர், அவ்வம்மையார் இறைவனடி அடைந்தார். விழுப்புரம் தாலூகா பாக்கம் திரு. தெய்வநாயக ரெட்டியாரின் திருமகளான திருமதி குயிலம்மாள் என்னும் குணமணியை இரண்டாம் தாரமாகத் திருமணம் செய்வித்தனர்.

திருமதி குயிலம்மையார் தெய்வீகப் பண்புமிகுந்தவர். பெற்றோராகிய திரு. தெய்வநாயக ரெட்டியாரும் திருமதி. பாலம்மாளும் பாக்கத்தில் சகல செல்வங்களுடன் இனிய முறையில் இல்லறம் நடத்தி வந்தனர். அவர்களுக்கு வெகு நாளாய் மகப்பேறின்மையால், உபவாசம் பல பேணியும், பல ஆலயங்களுக்கும் பிரார்த்தனை செய்து கொண்டும், மகப்பேறு வாய்க்கவில்லை. ஒரு முறை அருட்பிரகாச வள்ளலாராகிய இராமலிங்க சுவாமிகள் பல நாள் அருள் நிட்டையிலிருந்து, வெளி வரும் சமயம், அவர்களைத் தரிசிக்கக் காத்திருந்த அன்பர்கள் பலரில், மனவுருக்கத்துடன் முதன்மையாக நின்றிருந்த பாலம்மாள் அவர்களைக் கருணையோடு நோக்கிய வள்ளற் பெருமான், தம் திருக்கரத்தால் திருநீற்றை அள்ளி அம்மையின்

முந்தானையில் இட்டு "இருக்கிறது போ" என்று வழங்கிய அருளாசியின் பயனாக சின்னசாமி ரெட்டியார் என்ற ஆண்மகவும், குயிலம்மை என்ற பெண் மகவும் தோன்றினர். அருட்குழந்தையாகிய திருமதி குயிலம்மையார் அருளாளரின் கருணையால் தோன்றிவராதலின் அருட் பண்பு மிகுந்தவராக விளங்கினர்.

## 4. அருளன்னை அவதாரம்

அருட் பெருமாட்டியாம் குயிலம்மையாருக்குத் திருமணமாகிய மூன்றாவது வருஷமே ஆண்டவர் அருளால் கரு தோன்றியது. கருவுற்றிருக்கும் காலத்தில் அவர்கள் தெய்வீகப் பொலிவுமிகுந்து திகழந்தனர். உலகத்தை உய்விக்கப் போந்த அருள் மணியாகிய நம் அன்னையார் விஜய ஆண்டு, ஆவணித் திங்கள் மக நட்சத்திரத்தில் வானவர் போற்ற, முனிவர்கள் வாழ்த்த இப்பூவுலகின் கண் தெய்வீகக் குழந்தையாய்த் திருஅவதாரம் செய்தனர். ஒளி விளங்கும் சொக்கத் தங்கமாய்த் திகழ்ந்த இத்திருக்குழந்தைக்குச் "சொர்ணம்" என்னும் திருநாமம் சூட்டினர். வளர்பிறைச் சந்திரனைப் போல், நாளொருமேனியும், பொழுதொரு வண்ணமுமாய் வளர்த்து வந்தனர்.

குழந்தைக்கு மாதம் 18 ஆயிற்று, தந்தையார்-தம் 32-ஆம் வயதில் இறைவனடி அடைந்தனர். பின்னர் திருமதி-குயிலம்மையாரின் தாய் வீட்டினர், அவ்வம்மையையும், அருட் குழந்தையாம் சொர்ணத்தையும் பாக்கத்திற்கு அழைத்து வந்தனர். அரண்மனைக் குழந்தை போல் சீரும் சிறப்புமாக இனிது வளர்த்து வந்தனர்.

# III இளமை

## 1. விளையாட்டு

அடியார்களை ஒன்று திரட்டி, ஆன்ம ஞானம் புகட்டவந்த இவர், சிறுமியர்களைத் திரட்டி, சிற்றில் அமைத்து, சிறு சோறட்டு, கண்ணனுக்கு ஊட்டி, அனைவருக்கும் வழங்குவர். விளையாடும் காலத்திலேயே அனைத்துச் சிறுமியர்களுக்கும் தலைமையாகத் திகழ்ந்தனர். இவர்தம் விளையாட்டுக்கள் அனைத்தும் தெய்வத்தன்மை வாய்ந்தனவாகவே விளங்கும்.

## 2. பிறர்க்கு உதவுதல்

அருளன்னையின் ஆறாம் வயதில், தம் தாயுடன் நிற்கையில், ஒரு பிச்சைக்காரன் வந்து, பிச்சைபோடும்படி தொல்லைப்படுத்தினான். உடனிருந்தவர்கள் சினந்து பேசி, அவனை அனுப்பிவிட்டனர், அதுகண்ட அருளன்னை தம் தாயை நோக்கி, "நாம் போடாவிடில் யார் போடுவார்கள் அம்மா?" என்று பரிதாபத்துடன் கேட்டனர். "ஊரார் போடுவர்" என்று தாய் பதில் சொல்ல, "அதுபோல் நாமும் போட்டால் என்ன?" என்று அருளன்னை வினவினர். குழந்தையின் பரந்த உள்ளத்தைக் கண்ட தாய் அதிலிருந்து யாருக்கும் இல்லையென்று கூறுவதில்லை. "விளையும் பயிர் முளையிலே தெரியும்" என்பது போல, பிற்காலத்தில் அடியார்களின் துன்பம் கண்டு இரங்கி, அருள்செய்யும் கருணையுள்ளம். அவ்விளம் வயதிலேயே அருளன்னை யிடம் தோன்றி விளங்கியது என்பதை அறிகிறோம்.

## 3. கல்வி

திண்ணைப்பள்ளிக்கூடத்திலேயே நம் அருளன்னை தெலுங்கும் தமிழும் பயின்றனர். தெலுங்குக் கீர்த்தனை களையும், பக்த விஜயம், பாகவதம் போன்ற அருள் நூல்களையும், நன்கு படித்தறிந்தனர். தெய்வபக்தி, உபவாசங்கள். ஜீவகாருண்யம், குருபக்தி, பிராம்மண விசுவாசம், பந்துக்களிடம் மரியாதை, உலக மக்களிடம் அன்பு முதலிய நற்பண்புகள் அனைத்தும் உடையவராய்த் திகழ்ந்தனர்.

இதுகண்ட பள்ளி ஆசிரியர் முழுப்பொறுப்பையும், இவ்வம்மையிடம் ஒப்படைப்பர். அம்மையார் பள்ளிக்குச் சட்டாம் பிள்ளையாக விளங்கினார். பிற்காலத்தில் அருட்சட்ட அடியார்களுக்கு வரும் ஐயங்களைத் தீர்த்து, அருள்விளக்கம் வழங்கவுள்ள திரு. தாய் அவர்கள், அன்று பள்ளிப் பிள்ளைகளின் ஐயங்களைத் தீர்த்து வந்தனர்.

படிக்கும் பாடங்களிலோ, ஆசிரியர் தரும் கணக்குகளிலோ, ஐயம் தோன்றின், அங்குள்ள அம்மன் கோவிலுக்குச் சென்று, அம்மனிடம் கேட்டு விளக்கம் பெறுவதுண்டு. நம் அருளன்னையார் பள்ளிக்கும், வீட்டுக்கும் ஒப்பற்ற ஓர் ஒளிவிளக்காகத் திகழ்ந்து வந்தனர்.

## 4. ஆச்சார்ய ஸ்வாமிகளின் அருளாசி

இவருக்கு வயது 10 ஆகும் போது, ஆதி சங்கர குரு பரம்பரையைச் சேர்ந்த காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு-ஸ்ரீ-சந்திரசேகரேந்த்ர சரஸ்வதி ஸ்வாமிகள் பாக்கத்திற்கு எழுந்தருளினார்கள். பல்லக்கில் பவனி வந்த அவர்கள் நம் அன்னையின் முகத்தில் பொலிந்த தெய்வீகப் பொலிவையும், பின்னர் அருள் நிலையில் உயரப்போகும் தன்மையையும் தம் ஞானத்தால் உணர்ந்து, “இது யார் குழந்தை” என வினவினர்.

அருகில் இருந்தவர்கள் சாத்தனூர் குழந்தை என்று பதில் கூறினர். "இராமலிங்கா ரெட்டியார் பேர்த்தியோ?" என்று வினவி, திருக்கண் சாத்தி, அருள் புரிந்தனர். "நல்வழியில் முன்னேற்றத்திற்கு வரலாம்" என அருள் பாலித்தனர். அனைவரும் ஆனந்தம் அடைந்தனர். குழந்தைக்கோ, சுவாமி பேரில், பேரன்பும், பக்தியும் ஏற்பட்டது. இன்னும் எந்தப் பெரியவர்கள் வந்தாலும், அப்படியே வாக்களிப்பது வழக்கம்.

## 5. தினசரி வழிபாடு

பத்து வயதிலேயே, அதிகாலையில் படுக்கையிலிருந்து எழுந்து வந்ததும், குளித்து, புத்துடையணிந்து, நெற்றியில் திருநாமம் இட்டு, திருவிளக்கேற்றி கண்ணனின் திருவுருவப் படத்திற்கு நிறைய மலர்கள் சாத்தி, வெண்ணெய் வைத்து அன்புடன் ஆராதனை செய்து மனமுருகிப் பாடியும், ஸ்ரீ கவுரியைத் துதித்தும், தியானம் புரிந்து வழிபாடாற்றிய பின்னரே ஆகாரம் எடுத்துக் கொண்டு, பள்ளிக்குச் செல்வது வழக்கம்.

அன்னையாகிய குயிலம்மை இறை வழிபாடு செய்த பின்னரே உணவருந்துவர். தாய்மாமனாகிய சின்னசாமி ரெட்டியாரும், கீதாபாராயணம் செய்த பின்னரே உணவு அருந்துவர். அது போலவே நம் அன்னையார்க்கும் தெய்வபக்தி மிகுந்து வந்தது. மேலும் பூர்வ ஜன்ம சுகிர்தமும், பெரியோர்களின் அருளாசிகளும் ஒன்று கூடி நம் அன்னையின் அருள் நாட்டத்தை வளர்த்தன.

மாலையில் பள்ளியினின்று வந்ததும், முகம், கை, கால் சுத்தி செய்து கொண்டு, கண்ணன் திருவுருவப் படத்திற்கு வழி பாடாற்றி, அம்மன் கோயிலுக்குச் சென்று, அன்புடன் வலம் வந்து வழிபட்டு அருள் பெறுவது வழக்கம்.

பின்னர் இல்லம் சேர்ந்து, பள்ளிப்பாடங்களைப் படித்துவிட்டு, சிறிது ஆகாரம் அருந்துவர். அனைவரும் உறங்கிய பிறகு, ஒரு அறையில் திருவிளக்கேற்றி வைத்துக்கொண்டு, பிரஹ்லாத சரித்திரம், மார்க்கண்டேய விலாசம், பக்த ராமதாஸ் சரித்திரம் முதலிய நூல்களைப் பக்தியுடன் வாசித்து, மனமுருகிப் பாடி, "ஆண்டவனே! அனைவரும் உறங்குகின்றார்களே; இதுசமயம் நேரில் வரலாகாதா?'' என்று அழுவர், அழுது கொண்டே உறங்கியும் விடுவர். உடனே சக்தி வெள்ளை உடையுடன் காட்சியளித்து, "ஏனம்மா கவலைப்படுகிறாய்? கவலை வேண்டாம்'' என்று கூறி மறைந்து விடுவர். உடனே அன்னையார் ஆனந்தமடைவர். இதனை யாரிடமும் கூறாமல் ரகசியமாக உள்ளத்தில் கொண்டு போற்றுவர்.

மறுநாள் காலை புத்தகங்களுடன் பள்ளிக்குச் செல்கையில், அம்மன் ஆலயத்திற்குச் சென்று வணங்கி "தாயே! ராத்திரி தந்த வாக்கை நிறைவேற்ற வேண்டியது உன் கடமை" என்று ஒப்புவித்துப் பின்னர் பள்ளிக்குச் செல்வர்.

## 6. நூல் ஆராய்ச்சி

சுமதி சதகம், கிருஷ்ண சதகம், ராமதாரக சதகம், நரசிம்ம சதகம், தாசரதி சதகம், நீதி சாஸ்த்ரம், பதிவிரதா தர்மம், பக்த விஜயம், பாரதம் ஆதிபர்வம், விராட பர்வம், பாஸ்கர ராமாயணம், அத்யாத்ம ராமாயணம், சீதா கல்யாணம், சுக்ரீவ விஜயம், பாகவதம், காளிங்க நர்த்தனம் ஆந்த்ரநாம சங்க்ரகம் (நிகண்டு) முதலிய தெலுங்கு நூல்களையும் அன்னதானப் பலன், ஞானக் கோவை, நிஜானந்த போதம் (அறிவுக்கும் உயிருக்கும் வாதம்) இராம நாடகம் முதலிய தமிழ் நூல்களையும் அன்னையார் பயின்று தெருளூற்றுத் திகழ்ந்தனர்.

## 7. தன்நல மின்மை

உயர் குணம் நிறைந்த சான்றோர்களின் பண்புகளில் தலை சிறந்தது தன்னலமின்மை. தனக்கென வாழாது, பிறர்க்கென வாழும் பெரும் பண்பு அருளன்னை அவர்களின் நினைவிலும், சொல்லிலும், செயலிலும் இளமையிலேயே மிளிர்ந்து வந்தது. அதுகண்ட உற்றாரும் ஊராரும் நல்லோரும் பெரியோரும் வியந்து போற்றினர். நல்லாசி அருளினர்.

## 8. விரதங்கள்

சோம வாரம், மங்கள வாரம், சுக்கிர வாரம், சனி வாரம், கிருத்திகை முதலிய நன்னாட்களில் மிக்க பக்தியுடன் நம் அருளன்னை உபவாசம் இருப்பதுண்டு. காமியார்த்த பலன்களில் நாட்டமின்றி, 'இப்பிறவியிலேயே கடைத்தேற வேண்டும். இனி பிறவா நிலையை அடைய வேண்டும்' என்ற லக்ஷியம் சிறு வயதிலேயே இருந்து வந்தது.

## 9. தெய்வத் தொடர்பு

நம் அன்னையார் இளம் வயதிலேயே எந்த க்ஷேத்திரத்திற்குச் சென்றாலும், எந்தக் கோயிலில் வழிபாடு ஆற்றினாலும் மனமுருகி வழிபடுவர். அத்தெய்வத்தின் திருவுருவைத் தம் உள்ளத்தில் நன்கு எழுதி உருகுவர். அன்று இரவே அம் மூர்த்திகள் நம் அன்னையார் கனவில் காட்சி அளித்து, நல்வரம் அருளுவர். தூய்மை சான்ற மனமுடையார்க்கன்றி, மற்றார்க்கு இச்செயல் இயலாதன்றோ? பிடிவாதமும், திடபக்தியும், அசைவிலா மனமும், பற்றற்ற உள்ளமும் அமையப் பெற்றவர்கட்கே இச்செயல் செய்ய இயலும்.

இவர் சிறுபோதில் திருப்பதி, பழனி, மைலம், திருவகிந்திரபுரம், திருப்பரங்குன்றம், திருக்கழுக்குன்றம் முதலிய மலைகளில் எழுந்தருளியிருக்கும் ஆண்டவர் தரிசனத்திற்குச் சென்றால், ஆண்டவரை அன்புடன் தரிசித்து வழிபட்டுத் திரும்பும்போது "இந்த மலையில் தான் இருந்தால் என்ன? ஏதேனும் கனி வர்க்கங்கள் புசித்து, இறைவனைத் தியானித்துக் கொண்டு இருக்கலாமே" எனச் சற்று நின்று மலைகளைப் பார்த்துக்கொண்டு சிந்தனை செய்வதுண்டு. இத்தகைய உள்ளம் இளமையிலேயே இருந்ததால் தான், பிற்காலத்தில் மிகவுயர்ந்த தவம் புரியும் மாபெரும் வாய்ப்பு நம் அன்னையார்க்குக் கிட்டியது.

ஒருமுறை தாய் அவர்கள் குடும்பத்தினருடன் பழனிக்குச் சென்று மீள்கையில் படியில் இறங்கும் போது, 'அங்கே ஏன் போகிறாய்' என்று ஒரு குரல் கேட்டு திரும்பி பார்த்தனர். ஒரு பெரியவர் புன்முறுவலோடு நின்று கொண்டிருந்தார். தம்மை அறியாமல் அவரை வணங்கினர் தாய். தாய் அவர்களை நோக்கி, "உன் மனக்குறை நீங்கும் இந்த வில்வமும் மிளகும் சாப்பிடு" என்று கூறினர். பழனி முருகனே அவ்வாறு அருள் செய்ததைப் பின்னர் அறிந்தனர் தாய் அவர்கள்.

## 10. பெரியோர்கள் சேவை

இரெட்டிமார்கள் நல்ல கவிஞர்களையும், பாகவதர் களையும் அழைத்து, அடிக்கடி தம் இல்லங்களில், சொற்பொழிவுகள், கதா காலக்ஷேபங்கள் நடத்துவதுண்டு என முன்பே கூறினோம். அம்முறையில் இல்லத்திற்குப் பல மகான்கள் வருவார்கள். நற் குடும்பத்தில் தோன்றி வளர்ந்து வரும் நம் அன்னையார் பெரியோர்களுக்குத் தொண்டு செய்யும் பக்குவம் பெற்றிருந்தார்கள். அவர்களுக்குத்

தொண்டு செய்வார்களே தவிர, யாரையும் ஆராயாமல் எளிதில் நம்ப மாட்டார்கள்.

இக்குழந்தையின் செயல்களைக் காணும் பெரியோர்கள், சிறியோர்கள், உறவினர்கள் அனைவரும் இச்செல்வக் குழந்தையின் வாக்கியங்களையும். வாசிப்பையும், பெருந்தன்மையையும் கண்டு, பிரமிப்பார்கள்.

"சிறு குழந்தை தானே! வேறு பிள்ளையோடு விளையாடுகிறதா? ஒரு பொய் சொல்கிறதா? அனைவரிடத்திலும் என்ன அன்பு, என்ன விஸ்வாசம், எவ்வளவு மரியாதை" என்று உரையாடிக் கொள்வர். இவர் எதையும் கவனிக்க மாட்டார். தான் ஆடவந்த ஆட்டத்தை ஆடி விட வேண்டுமே என்று தீர்மானித்துக் கொள்வர்.

உடனே இறைவனை வேண்டுவர் "உலக பந்தங்களில் ஈடுபடுத்தி விடாதே இறைவா! எதிலும் பற்றில்லாமல் கொண்டு வர வேண்டும் ஸ்வாமி!" என மனம் உருகிப் பிரார்த்திப்பர்.

## 11. குருஅருள் வேட்டல்

'ஆரியக் கூத்தாடினாலும் காரியத்தில் கண் வை' என்பது போல நம் அருளன்னை அவர்கள் இளமையிலேயே எந்தக் காரியத்தைச் செய்தாலும் இப்பிறவி கடைத்தேற வேண்டுமே, வழிகாட்டிக் கரை சேர்க்கும் வளமைமிகு குருநாதர் வாய்க்கவேண்டுமே என்ற ஏக்கம் கொண்டவர்களாய் இருந்தார்கள். அவ் ஏக்கமே, அவ்வருள் நாட்டமே, பிற்காலத்தில் சற்குருநாதரை, நம் அருளன்னையிடம் ஈர்த்தது என்பது கருதத்தக்கது.

# IV இல்லற வாழ்க்கை

## 1. மணமகன் மாண்பு

புண்ணிய பூமியாகிய நம் பாரத நாட்டில் பிரெஞ்சுக் காரர் ஆட்சிக்குட்பட்ட இடத்திற்கு புதுச்சேரி (பாண்டிச்சேரி) என்னும் பெயருடைய புனிதத்தலம் தலை நகராகும். எத்தனையோ அருளாளர்களுக்கு இருப்பிடமாகி, இயற்கை எழில் மிகுந்து, அருளும் பொருளும் நிறைந்து, பேரும் புகழும் பெற்றுத் திகழும் அத்திருநகர்க்கு, மேற்கில் 16 கி.மீ., தூரத்தில் அப்பர் சுவாமிகள் கடலினின்று கரையேறி, "தோன்றாத் துணையாய் இருந்தனன் தன் அடியோங்களுக்கே" எனத் தேவாரம் பாடிப் போற்றியருளிய திருத்தலமாம் திருப்பாதிரிப்புலியூர் உள்ளது. அதன் வடக்கில் 8 கி.மீ. தொலைவில், பிள்ளையார்குப்பம் என்னும் நற்பதி ஒன்றுள்ளது (புதுவைக் கருகாமையில் வேறு ஒரு பிள்ளையார்குப்பம் உள்ளதால், இதனை கிருமாம்பாக்கம் அடுத்த பிள்ளையார் குப்பம் என்பர்). வரசித்தி விநாயகப் பெருமான் அவ்வூரில் திருக்கோயில் கொண்டெழுந் தருளியுள்ளனர். பச்சைப்பசேல் எனும் இயற்கையின் அழகும், கடற்காற்றின் இனிய அசைவும், அங்கு உற்றார் பலர்க்கும் உளக்களிப்பூட்டும் திறத்ததாய் அவ்வூர் விளங்கும். அங்கு உயிரினத்தை யோம்பும் பயிர்த் தொழிலைப் பேணும் பண்புமிக்க இரெட்டியார் இனத்தவர் வீடுகள் சில முதன்மை பெற்று மிளிர்கின்றன. அவற்றுள் சீரும் சிறப்பும் தெய்வீகப் பொலிவும் மிகுந்து இலங்கியது மணியம் திரு. பாபு ரெட்டியார் அவர்கள் திருக்குடும்பமாகும்.

திரு. பாபு ரெட்டியார் அவர்களின் திருக்குமாரர், திரு. வேங்கடபதி ரெட்டியார்அன்பும் பண்பும் மிக்க அருட்குணம் படைத்தவர். ஈகை, இரக்கம், பொறுமை

தெய்வபக்தி, நல்லார்க்கு உதவும் பெருந்தன்மை முதலிய நற்பாங்கு அனைத்தும் ஒருங்கமைந்த அவர், நம் அன்னையார்க்குத் தாய் மாமனின் குமாரர் ஆவர். அவர்க்கு நம் அன்னையைத் திருமணம் செய்விப்பது என உறவினர் பெரியோர் அனைவரும் தீர்மானித்தனர். இறைவனின் திருவுளம் இருந்தவண்ணம் இருபெருஞ் செல்வக் குடும்பத்தின் சிறப்பினுக்கேற்ப அருள்வளம் பொருள்வளம் ஆகிய சகலவளங்களுடனும் அன்னை அவர்களின் 16ம் வயதில் திருமணம் இனிது நடைபெற்றது.

## 2. இல்லற இயல்பு

நம் அருளன்னையார் அவர்கள் இல்லற வாழ்வில் ஈடுபட்டனர். புகுந்தவீடு, பெரியகுடும்பம். அக்குடும்பத்தில் வாழ்ந்த அனைவர்க்கும் ஒரேமனதாக நல்லமுறையில் கவனித்த வண்ணம் மிக இனிது குடும்பம் நடத்தி வந்தனர்.

அப்பொழுதும், காலை ஸ்நானம், கண்ணன் பூஜை, துளசி பூஜை, கருட தரிசனம் இவைகள் செய்த பின்பே ஆகாரம் கொள்வர். இரவு உணவு முடிந்தபின் மாமியார், மாமனார் மற்றும் உள்ள பெரியோர் கேட்குமாறு, பாகவதம், ராமாயணம், பக்த விஜயம் போன்ற அருள் நூல்களை வாசித்துப் பொருள் விளக்கம் கூறுவர். அனைவரும் கேட்டு ஆனந்தமுறுவர். நம் அருளன்னையார் எதிலும் பற்றின்றி அருள்வாழ்வு ஆற்றி வந்தனர்.

## 3. குடும்ப விளக்கு

இவர்கள் நடந்தால் பூமி அதிராது. அடிமேல் அடிவைத்து அசையும் உயர்ஜாதி அன்னம்போன்று நடப்பர்.

நடுத்தர உயரம், நல்ல சிவப்பு, கருணை நோக்கம், கண்டோரைக் கவரும் காந்த சக்தி, அடக்கம், தெய்வீக

ஒளிதிகழும் திருவதனம், இனிய குயில் போன்ற குரல், பேச்சில் தெளிவு, ஆறுதல் கூறி அரவணைக்கும் தாயின் கருணை, இவையே இவர்களின் தோற்றம். தாய்மொழியான தெலுங்கில் மிக நன்றாகப் பேசவும், படிக்கவும், எழுதவும், பாடவும் வல்லவர்கள்.

யார் துன்பப்பட்டாலும், அதைக்கேட்டு இவர் உள்ளம் வருந்துவர். உடனே அவர்களுக்கு உதவி செய்வர். என்றும் எக்காலத்தும் பிறர்மனம் வருந்தும் படி ஏதும் கூறார். ஈகை, இரக்கம், பொறுமை, அறிவுக்கூர்மை, ஆகிய பண்புகள் நம் அருளன்னை அவர்களால் பொலிவு பெற்றன எனலாம். இவர்கள் குடும்ப விளக்காக விளங்கலாயினர்.

## 4. முதாதையரிடம் பணிவு

சகல கலைகளிலும் வல்லவராக விளங்கிய அன்னை அவர்கள் கற்ற கலைகளின் வண்ணம் தம் வாழ்க்கையை அமைத்துக் கொண்டார்கள். கொண்ட கணவனின் எண்ணத்திற்கேற்ப நடத்தலோடு, புகுந்த வீட்டில் இருந்த முதியோர்களின் நல்லாசிகளையும் ஒருங்கே பெற்றனர். உணவு முதலியன வேளைக்குக் குறிப்பறிந்து அவரவர் சுவைக்கு ஏற்ப அளித்ததோடு உபசாரமும் தவறாது செய்வதை அறிந்த பெரியோர்கள், அன்னை அவர்களின் பணிவையும் பரிவையும் கண்டு இக் குழந்தையை நம் மருமகளாகப் பெற நாம் முற்பிறப்பில் தவம் செய்திருக்க வேண்டும் என்று தங்களுக்குள் பேசி மகிழ்ந்தனர். தமக்கு எல்லாம் தெரிந்தாலும் ஒன்றும் தெரியாதவர்களைப் போல நம் அன்னை அவர்கள் அடக்கத்தோடு வாழ்ந்தனர். அவர்கள் "மாமி மாமர்க்கு இதம் செய்பவராய், வாசல் வருவிருந்தோம்புபவராய்" ஒரு குடும்பத்துப் பெண் வாழ வேண்டுமென்று அறப்பளீசுர சதகம் கூறுவதற்கு இலக்கியமாய்த் திகழ்ந்தார்கள். சுவர்ணாம்பாள் என்ற தம்

பெயருக்கேற்ப மாற்றுயர்ந்த பொன்னாக இலங்கிய இவர் தம் பண்பு அனைவரையும் ஈர்த்ததில் வியப்பென்ன? பின்னர் அனைத்து அடியார்களும் ஈர்க்கப்படப் போகின்றார்கள் என்பதற்கு இதுவே அறிகுறி.

## 5. அடங்கி நடத்தல்

'கல்விக் கழகு கற்றுணர்ந்தடங்கல்' என்ற மூதுரைப்படி நிறைகுடமாக விளங்கும் அன்னை அவர்கள் அடக்கமாகவே வாழ்ந்தனர். யார் எதைக் கூறினாலும் உடனே வெடுக்கென பதில் கூறாது. பேசுபவர்கள் மனநிலையை அறிந்து, அவர்கள் தன்மைக்கேற்ப, அடக்கமாகப் பதில் கூறுவார்கள். ஆனால் அவர்களின் அடக்கமான பதில் பொங்கி வந்தவர்களை அடக்கிவிடும். அனைத்தையும் உள்ளடக்கிய கடல் தன்னுள் அமைந்த பொருள்களை எளிதில் வெளிக்காட்டாது அடங்கி இருத்தல்போல, அன்னை அவர்கள் விளங்கினார்கள். கடலுள் மூழ்கினால்தான் அதனுள் இருக்கும் விலையுயர்ந்த பொருள்கள் கிடைக்கும். அது போல அன்னை அவர்களிடம் நன்கு பழகப் பழகத் தான் எத்துணை அரிய பொருள்களைத் தமக்குள் அடக்கி வைத்திருக்கின்றார்கள் என்பது நன்கு தெளிவாகும்.

சிறு குழந்தைகள் முதல் பெரியவர்கள் வரை, கற்றறியாத பாமரர்கள் முதல் கற்றுணர்ந்த சான்றோர்கள் வரை அவரவர்களுக்கு ஏற்றவாறு பொருள்களைக்கூறும் அன்னையின் அருள் இயல்பும் உயர்பண்பும் வியந்து போற்றற் குரியன.

## 6. நல்வழி கூறல்

அன்னை அவர்கள் புகுந்த இடத்தில் சிறியவர் பெரியவர் அனைவரும் சுமார் இருபது முதல் முப்பது பேர்

வாழ்ந்தனர். பெரிய குடும்பம்: விவசாயக் குடும்பம். எல்லோரும் ஒரேவித எண்ணமோ, மனப்பாங்கோ கொண்டவர்கள் அல்லர். ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு பிரச்சினை எழும். அதை நம் அன்னை அவர்களிடம் வந்து கூறுவார்கள். நாம் வயதில் பெரியவர்கள் ஆயிற்றே: இவர் நம்மைவிட வயதில் குறைந்தவர் ஆயிற்றே, என்ற எண்ணமின்றி தனிமையில் அன்னை அவர்களிடம் தங்கள் உள்ளம் திறந்து குறைகளைக் கூறுவர்.

அன்னை அவர்கள், அவரவர் மனநிலையை நன்கு அறிந்து, குடும்பச் சூழ்நிலைக்கும் ஏற்றவாறு அவர்களும் சமாதானம் பெறும் நிலையில் நல்ல அறிவுரைகளை ஆணித்தரமாக, ஆனால் அன்பாக, ஏற்றுக் கொள்ளும் நிலையில் எடுத்துக் கூறுவார்கள். மனக் கலக்கத்தோடு வந்த அவர்கள் தெளிவு பெற்று மனமகிழ்ச்சியோடு செல்வார்கள்.

பின்னர், அடியார் பெருமக்களுக்கும் அன்பர் களுக்கும் நல்வழி கூறி வழிகாட்ட வந்தஅன்னை அவர்கள் தம் குடும்பத்தில் உள்ளவர்களுக்கு நல்வழி காட்டித் தெருட்டியதில் வியப்பென்ன? இப்பண்புகள் அன்னை அவர்களிடம் அமைந்த நற்பண்புகளின் விதைகளாயின.

ஊருக்கு எந்தப் பெரியவர்கள் வந்தாலும் மணியக்காரர் இல்லமான தாய் அவர்கள் இல்லம் வருவர். அவ்வாறு வரும் பாகவதர்கள், சொற்பொழிவாளர்கள், தாய் அவர்களுடன் உரையாடும் போது அன்னையின் நுண்ணறிவையும் பரந்த நூல் ஆராய்ச்சியையும் கண்டு வியப்பர். இவர்கள் தம் இல்லத்திலேயே சொற்பொழிவு வைப்பது உண்டு.

அத்திப்பட்டு பாகவதர் தம் கதாகாலட்சேபங்களுக்கு குறிப்புகளை நம் தாயிடம் கேட்டு அறிவார். மதலப்பட்டு

சதாசிவ பாகவதருக்குக் குசேலோ பாக்கியானம், பெத்ததாசு சரித்திரம் இரண்டையும் காலட்சேப வடிவில் நம் தாய் அவர்கள் எழுதித் தந்தனர்.

## 7. பொறுப்பேற்றல்

அன்னை அவர்கள் 'செய்வன திருந்தச் செய்' என்ற பொன் மொழிக்கிணங்க எந்தக் காரியத்தைச் செய்தாலும் மிகச் சிறப்பாகச் செய்து முடிப்பர். திட்டமிட்டு முன்னரே பொருளைச் சேகரித்து அவசரமும் அலைச்சலும் இன்றி, மிக அமைதியான முறையில் செயல் புரிவார்கள். எந்தச் செயலிலும் எவ்விதக் குறைபாடும் யாரும் காண இயலாதவாறு பொறுப்பேற்று நடத்தும் திறமையைக் கண்டவர் யாவரும் 'அம்ம!' என்று அதிசயிப்பர்.

அன்னை அவர்களின் அருந்திறமையைக் கண்ட உற்றார் உறவினர் தம் இல்லங்களில் நடைபெறும் திருமணம் முதலிய விழாக்களுக்கும் மற்றும் நிகழ்ச்சி களுக்கும் அன்னை அவர்களே பொறுப்பேற்று நடத்த வேண்டும் என்று வேண்டுவர். அவர்கள் வேண்டு கோளுக்கிணங்கி பொறுப்பேற்று அச்செயலை மிகச் சிறப்பாக நடத்தி முடிப்பார்கள் நம் அன்னை அவர்கள்.

தன்னை அறியாமலேயே தலைமைப் பதவி அன்னை அவர்களிடம் வந்து சேர்ந்தது. கண்டவர் அனைவரும் தமக்குள் வணக்கம் செலுத்திப் போற்றினர்.

குடும்பத்தோடு அல்லது உறவினர்களோடு வெளியூர் செல்ல நேர்ந்தால், அனைவரும் தம் விலையுயர்ந்த நகைகளை அன்னை அவர்களிடம் தந்து பின்னர் பெற்றுக் கொள்வர். அனைவர் உள்ளமாகிய பொக்கிஷத்தைப் பத்திரமாகப் பார்த்துக்கொள்ளும் அன்னை அவர்களால்

அந் நகைகளையா காப்பாற்ற இயலாது? இவ்வாறு தக்க நற்பண்பு நலம் சான்றவர் நம் அன்னையார் என்பது அறிந்து போற்றத்தக்கது.

## 8. கலை ஆர்வம்

'இறைவன் கலை வடிவினன்' என்பர். கலை எனினும் அழகு எனினும் பொருள் ஒன்றே. அழகே இறைவன். இறைவனே அழகு. அவனால் படைக்கப் பட்ட எல்லாப் பொருள்களும் அழகு நிறைந்தனவே. பசுங்கடல் பொங்கியதை ஒத்த பெருங்காடுகள், நீலவிதானத்தில் முத்துப் பதித்தாலன்ன தண் மீன்களைக் கொண்ட ஆகாயம், பரந்து விரிந்த கடல், இன்னோரன்ன இயற்கை அழகுகளைக் கண்டால் பொதுவாக எல்லோரும் வியந்து போற்றுவர். சிறப்பாக ஞானிகள் அவ்வழகில் இறைவனையே காண்பர்.

நம் அருள் சக்தித் தாய் அவர்களும் இதற்கு விதி விலக்கானவர் அல்லர். கலை மிகுந்த பொருள்களைக் கண்டால் மன ஒருமைப் பாடடைவர். அழகிய பொருள்களைப் போற்றி மகிழ்வர். அன்றாட வாழ்வில் உண்ணல், உடுத்தல், உறங்கல் முதலிய செயல்களையும் கலையோடு செய்வர்.

மணம் மிகுந்த மலர்களைக் குவித்து அழகு மாலைகள் தொடுத்து ஆண்டவருக்கு அணிவித்து மகிழ்வர். கலை அழகு மிகுந்த கோலங்கள் இட்டுக் களிப்பர். சிறப்பு விழா நாட்களில் பலவித அணிகளாலும், மலர் மாலைகளாலும் ஆண்டவனை அலங்காரம் செய்து கண்டு, கண்டு கழி பேருவகை பூப்பர். பிறரையும் கண்டு களிக்கச் செய்வர்.

மணம் மிக்க மலர்களை விரும்பித் தம் திருக்கரத்திலேந்தி மென்மையாக முகர்ந்து மகிழ்வர். அது போன்றே மண மிகுந்த பத்திகளைப் பொருத்தி அம் மணத்தை நுகர்வர்.

## 9. மகப்பேறு

ஒரு முறை குடும்பத்தினர் அனைவரும் திருப்பதிக்குச் சென்றார்கள். அப்போது நம் அன்னையின் தாயார், குயிலம்மையார், இறைவனிடம் மனமுருகி நின்று, நம் அருளன்னையார்க்குத் தக்க காலத்தில் மகப்பேறு அருள வேண்டும் எனப் பிராத்தித்தனர். உடனே இறைவன் திருவருள் புரிந்தனர்.

அன்னையின் கனவில் இறைவனும் அம்மையும் காட்சியளித்து, மிளகும் கற்பூரமும் தந்து, "மிளகை அருந்து, கற்பூரத்தை வைத்துக் கொள்" என்று அருளினார்கள். உடனே கரு உண்டாயிற்று. ஐந்து மாதத்தில் இறைவன் விக்ரஹ வடிவில் தோன்றி, முந்தியைப் பிடிக்கச் சொல்லி. துளசியை அள்ளிப் போட்டு, "இதைச் சாப்பிடு: கவலைப்படாதே" என அருளினர்.

ஒன்பதாம் மாதம், நட்சத்திரம் போல் ஓர் ஆண் மகவு தோன்றியது. திருப்பதி மலைக்குச் சென்று, பெருமான் திருவருளால் பிறந்த அந்தக் குழந்தைக்கு முத்து கொண்டா ரெட்டி என்று திருநாமமிட்டு நாளொருமேனியும், பொழுதொரு வண்ணமுமாக வளர்த்து வந்தனர்.

## 10. சற்குரு நாட்டம்

நம் அருளன்னையார் இல்வாழ்விலிருந்தாலும் அருள் தாகம் மிக்கவர்களாய் உண்மைச் சற்குருவை நாடியிருந்தனர். "உண்மை முத்தியின்பம் கூட்டுவிக்கவல்ல குருநாதர்

எப்போது வருவார்? இப்பிறவிலேயே முத்தியைக் கொடுக்கவல்லவர் எப்போது வருவார்?" என்று அருள்தாகம் மிக்கு உள்ளம் உருகி நின்றனர். தக்க பக்குவம் உள்ள சீடர்களை ஆட்கொள்ளும் பொருட்டு இத்தாரணிக்கண் திரு அவதாரம் செய்த கருணாமூர்த்தியான குருநாதராகிய ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் நம் அன்னை அவர்களைக் கடைக்கணித்தாளத் திருவுளம் கொண்டனர்.

ஆண்டவர் பொக்கிஷத்தைத் திறந்து, உலகத்திற்கு வெளிப்படுத்தி வருகிறார்கள். புதுப்புது அடியவர்கள் அந்த மர்மமான விஷயங்களை வெளிக்காட்டாமல், மிக ஜாக்கிரதையாக நடக்க வேண்டும். மிகவும் ஜாக்கிரதையாக இருந்தால் தான் நம்மை நாம் காப்பாற்றிக் கொள்ள முடியும்.

ஃ ஃ ஃ ஃ ஃ

குப்பையில் மாணிக்கம் கிடைத்தால், அதை எடுத்து துடைத்து, பளிங்கு செய்தால் தானே ஒளி வீசும்? வைரம் கிடைத்தால், அதை சாணையிட்டு மெருகு போட்டால் தானே ஒளி வீசும்? தங்கத்தை உருக்கி அடித்து நீட்டி ஆபரணம் செய்தால்தானே ஆண்டவனுக்குச் சாத்தலாம்? அது போல, நாம் தூய்மை அடையவே நமக்குச் சோதனைகள் வருகின்றன.

# V சற்குரு சேவை

## 1. குரு புகழ் கேட்டல்

நம் அருளன்னையின் தமையனார் திருசாத்தனூர் திரு. முத்துராம ரெட்டியார் அவர்கள், ஒரு நாள் ரெயிலில் செல்லும்போது, உறையூர் வைத்தியர் மூலம் ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் பெருமையை உணர்ந்து, அவருடன் வார்கால்பட்டு ரெயில் நிலையத்தில் இறங்கி, அவ்வூரில் எழுந்தருளியிருந்த சுவாமிகளை தரிசித்து, அவர் அருள் துணையால் அருட்சட்டம் ஏற்று, அருள் வாழ்வாற்றி வந்தனர். அவர், தம் தங்கையாகிய நம் அன்னையைக் காணும் போதெல்லாம் குருநாதரின் சிறப்பையும், அருட் சட்டத்தின் உயர்வையும் பற்றி மிக நன்றாக விளக்கிக் கூறுவர்.

பெரிய குடும்பத்தில் இருந்து சகலபொறுப்புகளையும் கவனிக்க வேண்டியிருப்பதாலும், கூந்தல் நிறைய இருப்பதால் விடியற்காலையில் பச்சைத்தண்ணீரில் முழுகினால் உடம்புக்கு ஒத்துக் கொள்ளாது என்றும், மகான்களிடம் வாக்கு கொடுத்துவிட்டால் பின்னர் தவறல் ஆகாது என்றும் கருதிய நம் தாய் குருநாதரை தரிசிக்கவோ, அருட்சட்டம் ஏற்றுக்கொள்ளவோ இசைவின்றி இருந்தனர்.

### 2. குருவைக் காணல்

ஆணவம் அகற்றும் ஊராம் ஆனத்தூர் பதியில் சுவாமிகள் எழுந்தருளியிருந்தார்கள். அக்கம் பக்கம் உள்ள ஊர் மக்கள் திரளாகவந்து தரிசனம் பெற்று உய்ந்தனர்.

'தாம் பெற்ற இன்பம் பெறுக இவ் வையகம்' என்ற பரந்த நோக்குடைய திருச்சாத்தனூர் முத்துராம ரெட்டியார் அவர்கள் தம் தங்கையாரான நம் அன்னை அவர்களை



ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகளால் ஆட்கொள்ளப்பெற்ற

**அருட்கொடி சுவாமிகள்**

என்கிற

திருச்சாத்தனூர் திரு. முத்துராம ரெட்டியார் அவர்கள்

ஆனத்தூருக்கு அழைத்துச் சென்றனர். முன்பே சுவாமிகளைப் பற்றிக் கேள்வியுற்றிருந்த நம் அன்னையார், 'நாம் அருகே சென்றால் நம்மையும் சட்டம் ஏற்கச் சொல்வார்களோ' என்று உன்னியவராய், அருகே செல்லாமல், தூரத்தே வலம் வந்து வணங்கிச் செல்லலாம் என்று எண்ணி, சுவாமிகளைச் சேய்மையில் வலம் வந்தார்கள்.

கல்லினுள் தேரைக்கும் கருப்பைக்குள் முட்டைக்கும் விருப்புற்றமுதளிக்கும் மெய்யனாகிய சுவாமிகளா அதை உணர மாட்டார்கள்? மவுனமாக இலை மறை காய் போல், கண்டும் காணாதவர்போல் இருந்துவிட்டார்கள். ஆயினும் ஒருவரும் அறியா வண்ணம் கருணை பாலித்தார்கள் என்று சொல்லவும் வேண்டுமா?

நம் அன்னையின் சிறிய தகப்பனரான திரு. ஜகந்நாத ரெட்டியாருக்கு ஜுரம், ஜன்னி நீக்கி அருள்புரிந்தது கண்ட அவ்வூர் அன்பர்கள் பலரும் வெளியூர் அன்பர்கள் பலரும் அருட்சட்டம் ஏற்று சுவாமிகளின் அடியவராயினர்.

## 3. அருட்சட்டம் ஏற்றல்

பின்னர் சாத்தனூர் சுவாமிகள் பிள்ளையார்குப்பம் வர நேர்ந்தபோது, அன்னை அவர்களிடம் சுவாமிகளின் மகிமையை எடுத்துக்கூறி, கட்டாயம் சட்டம் ஏற்க வேண்டும் என்று வற்புறுத்தினர். எவ்வளவோ மறுத்துக் கூறி பின் முன்னை நல்வினையின் தொடர்பால் நம் அன்னையார் தம் 22ஆம் வயதில் அருட்சட்டம் ஏற்றனர்.

எந்த ஒரு செயலை மேற்கொண்டாலும் அதை முழுமையாக செய்து முடிக்கும் ஆற்றல் பெற்றவரான நம் அன்னையார் சட்ட நெறியையும் முழுமையாகக் கையாண்டார்கள்.

விடியல் 3 மணிக்கு விழித்தெழுந்து நீராடி, முன்னவனார் ஆலயம் சென்று மூன்று பிரதட்சிணம் செய்து, முன்னவனார் எதிரில் ஒரு மணி நேரம் நிஷ்டை அமர்ந்து, 5 மணிக்கு வீடு சேருவர். அப்போதுதான் வீட்டிலுள்ள அனைவரும் நீராட எழுந்திருப்பர். அன்னை முன்னவனார் ஆலயம் சென்று நிஷ்டை அமரும் விஷயம் உடன் செல்லும் தாயார் திருமதி குயிலம்மையார் தவிர வீட்டிலுள்ள வேறு யாருக்கும் தெரியாது.

உடனே கண்ணன் பூஜை, துளசி பூஜை, கருட தரிசனம் இவைகள் செய்துகொண்டு, அனைவரோடும் குடும்ப காரியங்களைக் கவனிப்பர். மதியம் 12 மணி அல்லது 1 மணியளவில் அனைவரும் கண்ணுறங்கி ஒய்வுபெறும் வேளையில் அன்னையார் ஆண்டவரை வேண்டி நிஷ்டை அமருவர். பலரும் விழித்துக் கொள்ளும் சமயம் நிஷ்டையை முடித்துக் கொள்வர். ஆதலால், அது விஷயம் யாருக்கும் தெரியாது.

இரவில் பலரும் படுக்க 10 அல்லது 11 மணி ஆகும். அதன் பிறகு அன்னையார் நிஷ்டை அமருவர். அடியார்களுக்குக் கடிதம் எழுதுவதாயின் அப்போது தான் எழுதுவர். பிறகு ஒரு மணிக்குமேல் சற்று உறங்கி, மூன்று மணிக்கு விழித்துக் கொள்வர். இவ்வாறு நாள்தோறும் மூன்று வேளையும் தவறாமல் அருள்நிட்டை பேணி வந்தனர்.

## 4. சட்டத்தில் உறுதி

நம் அன்னையார் ஆவணி மாதத்தில் அருட்சட்டம் ஏற்றனர். மழைக் காலம், பச்சைத்தண்ணீரில் முழுகிப் பழக்கம் இல்லாதவர். நீண்ட கூந்தல் உடையவர். வேளாண்மைத் தொழிலில் ஈடுபட்ட பெரிய குடும்பம்

ஆதலால், வீட்டுக் காரியங்களில் இவர்கள் கவனிக்க வேண்டியவை ஏராளமாக இருக்கும். கூந்தலை ஆற வைக்க நேரம் இராது.

ஐப்பசி மாதத்தில் ஆண்டவர் ஒரு சோதனை தந்தார். நம் அன்னையார்க்குத் தலை கனத்தது. தொண்டை கட்டிக் கொண்டது. நீர் கொண்டு பேச முடியாமல் தவித்தனர். யாரிடமும் இதைக்கூறாமல், தம்மால் இயன்றவரையில் சமாளிக்க முயன்றனர்.

ஒருநாள் மிக, அதிமாகி விட்டபின், படுக்கவும், உறங்கவும் இயலாமல் மிகத் துன்பமுற்றபோது, ஆண்டவரை நினைந்து 'என் குடும்பத்தில் பல பெரியவர்கள் உள்ளனர். அவர்களுக்குப் பதில் கூற என்னால் இயலாது: இன்று இரவே இது சரியாகி விட்டால், நாளை தண்ணீரில் மூழ்கி அருட்சட்டத்தில் இருப்பேன். இல்லையெனில் வெந்நீர்தான் என்று மனமுருகி வேண்டிக் கொண்டனர்.'

ஆண்டவர் அருளால் சற்றே கண்ணயர்ந்தனர், அப்போது சுவாமிகள் காட்சியளித்து, நம் அன்னையை அழைத்துச் சென்று, விநாயகர் கோயிலில் அமர்த்தி, நீராட்டியது போன்று ஒரு கனவு நிகழ்ச்சி நடந்தது. விழித்து எழுந்ததும், அனைவரும் வியக்கும்வண்ணம் நன்கு பேச முடிந்தது. எழுந்து நீராடி விநாயகரை வலம் வந்து வணங்கினர். ஆண்டவரிடத்திலும் அருட்சட்ட நெறியிலும், உறுதியும், நம்பிக்கையும் கொண்டனர்.

## 5. ஆண்டவர் தீட்சை

பின்னர் நம் அன்னையார் சாத்தனூர் சுவாமியை சந்தித்தபோது அவரிடம் இச்செய்தியைக் கூறினர், அவரும் அளவிலா ஆனந்தம் அடைந்தனர். மறுமுறை ஆண்டவர் பண்ணுருட்டி என்ற தலத்திற்குத் தை மாதத்தில்

எழுந்தருளினர். அவர்களைத் தரிசிப்பதற்குச் சாத்தனூர் சுவாமி நம் அன்னையாரையும் அழைத்துச் சென்றனர்.

இம்முறை நம் அன்னையார், சுவாமிகளை அண்மையிலேயே வலம்வந்து வணங்கினர். சுவாமிகள் அன்னை அவர்களைச் சுட்டிக்காட்டி 'இவர்கள் யார்?' என்று வினவினர். சாத்தனூர் சுவாமி மகிழ்வோடு 'என் தங்கை; பெயர் சொர்ணம்; அருட்சட்டம் ஏற்றுள்ளனர். இடையில் சோதனை நடந்தது' என்று, செய்தியை விவரமாகக் கூறினர்.

கருணையோடு திருச்செவி மடுத்த ஆண்டவர் 'இனி நம்ம சொர்ணத்துத் தாய் சட்டத்தை விடுமா?' என்று கூறி அருள்பாலித்தனர். காந்தத்தைக் கண்ட இரும்புபோல் மனம் ஆண்டவர் பால் இழுப்புண்டு நம் அன்னையார் அடிமையானார்கள்.

## 6. குரு யார் என உணர்தல்

ஆண்டவர் காசி முதல் கன்னியாகுமரி வரை தேடித் தேர்ந்தெடுத்த சிறந்த அடியவர்களில் பிள்ளையார் குப்பம் அன்னையாரும் ஒருவராவர்.

எதையும் நன்கு ஆராய்ந்து தெளிந்த பின்னரே ஏற்கும் இயல்புடைய நம் அன்னையார் அருட்சட்டத்தை மேற்கொண்டொழுகினராயினும், 'சுவாமிகள் யார்? எப்படிப்பட்டவர்? உண்மையானவரா?' என்ற ஐயம் உடையவராயிருந்தனர். அதைத் தெளிவு செய்து கொள்ளவேண்டி தினமும் காலை நான்கு மணிக்கு விநாயகர் கோயிலில் நிஷ்டை அமர்ந்து முறையிட்டு வந்தார்கள்.

ஆறுமாதம் கழிந்தது: ஒருநாள் தியானத்தில் அமர்ந்திருக்கையில் விநாயகர் திருக்காட்சி கிடைத்தது. உடனே அவ்வுருவம் இரெட்டியப்பட்டி சுவாமிகளாகக் காட்சி அளித்தது. மாறி மாறி இவ்வாறு காட்சி கிடைத்தவுடன், ஓர் அசரீரி '**விநாயகர் திருவவதாரமே சுவாமிகள்**' என்று ஒலித்தது. தெளிவுபெற்ற நம் அன்னை அவர்கள் மனம்மிக மகிழ்ந்து, சுவாமிகள்பால் நீங்காத அன்பு கொண்டார்கள்.

அதுமுதல் எந்த ஐயம் தம்க்கு ஏற்பட்டாலும், நிட்டை மூலம் தெளிந்து கொள்வார்கள். பிற்காலத்தில் அடியார்கள் குறையேதும் சுவாமிகளிடம் கூறினால், அதைத் தெளிவுபடுத்தும்படி சுவாமிகளே கட்டளை யிட்டாலும், நிட்டை மூலம் தெளிந்து கொள்ளும் அருள் நிலை நம் அன்னையார்க்குக் கிடைத்தது.

## 7. உடல் பொருள் ஆவி அர்ப்பணம்

"தமியேன் உடல் பொருள் ஆவி மூன்றுந் திறை தந்தேன் தந்தேன் மெய்யனே" என்று ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் அருளிச்செய்த அருள்வாக்கை அன்னை அவர்கள் தம் வாழ்வில் கடைப்பிடித்தார்கள். ஒரு குடும்பத்தில் வாழ்ந்தாலும், 'சேற்று நீரில் வாழும் மீனின் உடலில் அச்சேறு சிறிதும் ஒட்டாதது போல' குடும்ப பந்தபாசம் ஒரு சிறிதும் அன்னையைத் தீண்டவில்லை. பரிபூர்ண சரணாகதி தத்துவத்தை முழுதும் கடைப் பிடித்தார்கள். உடலால் ஆண்டவர்க்கும் அடியவர்க்கும் தொண்டு புரிந்தார்கள். பொருளால் ஆண்டவர் விழா, அடியார்கள் சேவை செய்தார்கள். ஆவியை இறைவனடியில் ஒப்புவித்து சதா நிட்டை கூடிப் பேரின்பம் பெற்றார்கள்.

"சுகிக்கும் அடியார் நாளும் தொண்டு புரியும் சபை கண்டு மகிழ்ந்திடும் சுகத்தில் இருத்துவாயே'' என்ற அருட்பாடலின்படி அவர்கள் வேண்டியதெல்லாம் பேரின்பமே அன்றி இவ்வுலக இன்பத்தை நாடவில்லை. எல்லாம் உடையவன் செயல் என்று அவனிடம் ஒப்புக் கொடுத்து, அவன் இட்ட ஆணைப்படி நடக்கும் உறுதி பூண்டார்கள். முன்னரே பல புராணங்களைப் படித்து அறிந்திருந்ததால் குருநாதரிடம் தம்மை முழுக்க முழுக்க ஒப்புக் கொடுக்கும் பெருவாய்ப்பு இறையருளால் கிட்டியது.

## 8. திருச்சாத்தனூர் வைபவம்

ஆண்டவர் திருச்சாத்தனூர்க்கு, எழுந்தருளும் போது, நம் அன்னை அவர்களுக்குக் கடிதம் மூலம் அடியார்கள் தெரிவிப்பார்கள். அன்னையின் இல்லத்தில் உள்ள பெரியவர்கள் விரைவில் உத்தரவு தருவதில்லை. அன்னையும் வாய்திறந்து 'போய் வருகிறேன்', எனக் கூறமாட்டார்கள். ''சுவாமிகள் வந்துள்ளார்களே. அடியார்கள் குழுமியிருப்பார்களே, ஆனந்தமாக அருட்காட்சி கிடைக்குமே." என்று உள்ளம் சுவாமிகள் தங்கியிருக்கும் இடத்திலேயே இருக்கும். உடம்புமட்டும் பிள்ளையார்குப்பத்தில் குடும்பப்பணிகளை ஆற்றிக் கொண்டிருக்கும். மனதிலேயே ஆண்டவரை இருத்திக் கொண்டு ஆகாரம் அருந்தாமலேயே பணிகளைப் புரிந்து கொண்டிருப்பர். இது விஷயம் வீட்டில் யாருக்கும் தெரியாது.

உடனே ஆண்டவர் பெரியோர்களின் உள்ளத்தில் ஊக்கவும், "போய் ஆண்டவரை தெரிசித்து வருகிறது தானே" என்று விடை தருவார்கள். அதன் பின்னரே நம் அன்னையார் புறப்படுவர். திருச்சாத்தனூரிலிருந்து விழுப்புரம் ரெயில் நிலையத்திற்கு தினமும் வண்டி வந்து திரும்பும்.

அன்னையார் வரும்வரை அங்குவரும் அடியார்கள் என்ன குறை கூறினாலும். "அன்னையார் வரட்டும்; உங்கள் குறைகளைக் கூறி விளக்கம் பெறலாம்" என்று ஆண்டவர் கூறிவருவார்கள்.

அன்னை சென்றவுடன் அனைவரும் மகிழ்வார்கள். உண்மையாக உழைத்து உயரும் மாணவனைக் கண்டு மகிழும் ஆசிரியரைப் போல சுவாமிகள் திருவுளம் மகிழ்வர் என்பதை இயம்பவும் வேண்டுமோ? ஆண்டவர் நாற்காலி யில் அமர்ந்து அடியவர்கட்கு அருளுரை அருளுவர், இருபுறமும் பெரிய குத்து விளக்குகள் எரிந்து கொண்டிருக்கும். அடியவர் ஆண்டவர் அருகில் நின்று, பக்தியுடன் விசிறிக் கொண்டிருப்பர். அன்னை அவர்கள் ஆண்டவரை தரிசித்து, வலம்வந்து பணிந்து நிற்பர். சுவாமிகள் அடியார்களை அழைத்து, "உங்கள் குறைகளைக் கூறுங்கள்; அன்னை கவனித்து விளக்கம் தருவர்" என்று அருளுவார்கள்.

அவர்தம் குறைகளைக்கேட்டு, ஆண்டவர் அருள் நினைந்து நிட்டையமர்ந்து தமக்குக் கிடைத்த காட்சிகளை அன்னையார் ஆண்டவரிடம் கூறுவார்கள். அடியார்களின் ஐயங்களுக் கெல்லாம் உரிய விடைகள் கிடைத்து விடும். அவர்கள் அடையும் மகிழ்ச்சிக்கு எல்லை உண்டோ? ஆண்டவரின் அளப்பருங் கருணையையும், அன்னை அவர்களின் அருள் மாட்சியையும் அகத்தே எண்ணி எண்ணி வியப்பும் உவப்பும் எய்துவர்.

## 9. உடையவன் கணக்கு

ஒருமுறை ஆண்டவர் ஆனத்தூருக்கு எழுந்தருளிய போது அன்னை, தம் மாமனார் மாமியாரோடு தரிசிக்கச் சென்றிருந்தனர். ஆண்டவர் கருணை கூர்ந்து குப்பையில் எடுத்த மாணிக்கத்தை, சுத்தப் படுத்தி, சாணையிட்டு, மெருகு தர வேண்டுமே என எண்ணி, அன்னையின் மாமனாரைப்

பார்த்து "சாமி இப்படி வந்து தரிசனம் செய்து கொண்டு போய் விட்டால், அன்னை வீட்டிற்கு சாமி வரவேண்டாமா?" என்று கேட்டார்கள்.

"அதற்கென்ன, சாமி வரட்டுமே" எனப்பதிலளித்த மாமனார், நம் அன்னையை நோக்கி 'சுவாமிகளோடு தங்கி, அழைத்துவரட்டும். நாங்கள் சென்று இன்று எட்டாம் நாள் திருப்பாதிரிப்புலியூர் ரயில் நிலையத்திற்கு வண்டி அனுப்புகிறோம்,' என்று தெரிவித்து விட்டுப் புறப்பட்டார்கள், அது முதல் எட்டு நாட்களும் யார் வந்தாலும், "சாமி அன்னை வீட்டுக்குப் போகிறது" என ஆண்டவர் தெரிவித்துக் கொண்டிருந்தனர்.

இப்படி இருக்கையில் வைரவபுரத்து அடியார்கள் ஆண்டவரை அழைக்க வந்திருந்தனர். அது சமயம், பிள்ளையார்குப்பம் சென்ற அன்னையின் மாமனார், அங்குள்ள ஒரு சிலருக்கு அஞ்சினவராய், ஆனத்தூருக்கு வந்து, சுவாமிகள் இப்போது வைரவபுரம் போகட்டும். பிள்ளையார்குப்பத்திற்கு அடுத்த முறை அழைத்துச் செல்லலாம் என்றனர்.

உடனே அன்னைக்கு மனக்கவலை தோன்றி "எப்படியும் ஆண்டவரை நமது இல்லிற்கு அழைத்துச் செல்லாமல் தண்ணீரும் அருந்துவதில்லை; எத்தனை நாள் ஆனாலும் சரி" எனத் தீர்மானித்துக் கொண்டு ஓரிடத்தில் அழுது கொண்டே அமர்ந்து விட்டனர்.

இவ்வாறு அன்னையார் தம்மை மறந்த நிலையில் இருக்கையில், இரண்டு சக்திகள் தோன்றி, அன்னை அவர்களின் நெற்றியில் அருள் திருநீறிட்டார்கள், அப்போது ஆண்டவர் அங்குள்ள ஔவையார் ஊரலுக்கு

அடியார்கள் சகிதம் ஸ்நானத்திற்குச் சென்றிருந்தார்கள். சுவாமிகள் வந்தவுடன் பூஜை நடைபெற்றது. அனைவரும் உணவு அருந்தினர், அன்னையையும் உண்ண அழைத்தனர், அவர்களிடம் அன்னையார் ஒன்றும் தெரிவியாமல், ''ஆகாரம் வேண்டியதில்லை: பசியில்லை'' என்று தெரிவித்துவிட்டனர். உடனே அவர்கள் சுவாமிகளிடம் தெரிவித்தார்கள். சுவாமி அன்னையைத் தனிமையில் அழைத்து, "ஏன் உணவு கொள்ளவில்லை?" என வினவினர், "உணவு தேவையில்லை பசியில்லை" என்று அன்னை கூறி விட்டனர். சுவாமிகள், அப்பெரியவர்களை நோக்கி, இந்த நாட்டில் அன்னையைத் தான் முதல் முதல் உடையவன் கணக்கெடுத்திருக்கு; ஒன்றும் வற்புறுத்த வேண்டாம் எனத் தெரிவித்து விட்டனர்.

பிறகு, அன்னையார், தம் மாமனாரை நோக்கி, இந்த முறை சுவாமிகளை நம் இல்லத்திற்கு அழைத்துக் கொண்டு தான் செல்ல வேண்டும் என வற்புறுத்திக் கூறிவிட்டனர். உடனே அவர், திருச்சாத்தனூர் சாமியை அழைத்து, "நீயும் தங்கையும் இருந்து ஆண்டவரை அழைத்து வாருங்கள். நான் முன்னதாகச் செல்கிறேன், நாளைக்கு மறுதினம், ஷெட்டிலுக்கு, திருப்பாதிரிப்புலியூர் ரெயில் நிலையத்திற்கு வண்டி அனுப்புகிறேன்" என்று கூறிப் புறப்பட்டு விட்டார். அன்னை உணவு அருந்தாத விஷயம் அவர்களின் மாமனாருக்குத் தெரியாது.

அடுத்த நாள் சுவாமிகளும், திருச்சாத்தனூர் சாமியும், நம் அன்னையும், மற்றும் சில அடியவர்களும் புறப்பட்டுப் பண்ணுருட்டி இரும்புக் கடை திரு. குப்புசாமி செட்டியார் அவர்கள் இல்லத்திற்குச் சென்று சேர்ந்தனர்.

அங்கு சற்று நேரம் தங்கி இளைப்பாறியபின் அனைவரும் புகைவண்டியில் பயணம் செய்து திருப்பாதிரிப்புலியூர் வந்து அங்கு தயாராக இருந்த பிள்ளையார்குப்பம் வண்டியில் ஏறி பிள்ளையார் குப்பத்திற்குப் புறப்பட்டனர்.

## 10. அத்தியந்த சேவை

ஆண்டவர், திருச்சிராப்பள்ளி, வாணியம்பாடி, மேல் இலந்தைக்குளம், ஆனத்தூர், திருச்சாத்தனூர் முதலிய தலங்களுக்கு எழுந்தருளி, அருள் அற்புதங்கள் நடத்தியது போன்றே, பிள்ளையார்குப்பத்திலும் எழுந்தருளி அருள் ஆட்சி புரியத் திருவுளம் கொண்டனர்.

இவ்வூர் கடலூர்-புதுச்சேரி சாலையில், கடலூரிலி ருந்து 8 கி.மீ. தொலைவில் உள்ளது. சாலையிலிருந்து பிரதான கிழக்கு நோக்கிச்செல்லும் வழியில் 1½ கி.மீ. சென்றால் இவ்வூரைச் சேரலாம்.

அமைதியும் அழகும் குடிகொண்டதாய் இயற்கை யெழிலுடன் விளங்கும் இவ்வூருக்கு ஆண்டவர் அருளால், அவர் திருவாக்குப்படி, குற்றாலம், சித்தி நகர், தெய்வீகபுரம், சின்ன இரெட்டியப்பட்டி, அருட் சட்டத் தலைநகரம் என்று, பல திரு நாமங்கள் அமைந்துள்ளன.

இரெட்டியார் இனத்தவரும், மற்றும் பல இனத்தவரும், பரதவரும் வாழும் அவ்வூர் கடல் வளம் உள்ள நெய்தல் நிலமாதலால், தென்னை வாழை முதலியன இங்கு செறிந்து விளங்கும், சவுக்கு, நெல் முதலியன செழித்து வளரும்.

இத்தகு பெருமை சான்ற நல்லூரில் உள்ள நம் அன்னை பெருமாட்டியார்க்கு அருள்பாலிக்கவும், உலகமக்களை அவர்கள் மூலம் தெருட்டவும் எண்ணிய சுவாமிகள் பிள்ளையார் குப்பத்திற்கு எழுந்தருளினார்கள். சுவாமிகளைத் தம் ஊருக்கு எழுந்தருளும்படி கோரிய நம் அன்னையாரின் மாமனார் திரு. பாபு ரெட்டியார் அவர்கள் மங்கள வாத்தியத்துடன் அன்பர் குழாத்துடன் வரவேற்று, தம் இல்லத்திற்கு அழைத்துச் சென்றனர்.

சுவாமிகள் எழுந்தருளியுள்ளனரே! அவர்களுக்கு எவ்வாறு உணவூட்டுவது? அவர்கள் அந்தணர் சமைத்ததையே அருந்துவார்கள் என கூறக் கேட்டு உள்ளோமே; நம் ஊரில் ஒரே ஒரு அந்தணர் குடும்பம் தானே உள்ளது. விநாயகர் கோவிலில் வழிபாடு புரியும் திரு. சுப்பிரமணிய சாஸ்திரிகள் என்னும் அவர் ஆண்டவர்க்கு உணவு சமைத்துக் கொண்டுவந்து பரிமாறுவாரா? என்று பலவாறு எண்ணிய அன்னையார் கலக்கம் அடைந்திருந்தனர்.

சுவாமிகள் வந்திருப்பதையறிந்த திரு. சாஸ்திரிகள் தரிசிக்க வந்தனர். அன்னையார் அவரிடம் மெதுவாக நிலைமையை விளக்கினர். "அதற்கென்ன? நான் சமைத்துக் கொண்டுவந்து பரிமாறுகிறேன்: நீங்கள் எதற்கும் கவலைப்பட வேண்டாம்" என்று அவர் பதில் கூறினர்

அதன்பின், சுவாமிகள் வந்து தங்கிய நாட்களிலெல்லாம் சாஸ்திரிகளே உணவு பரிமாறுவது வழக்கம் ஆயிற்று. அவர் சிதம்பரம் வேத பாடசாலையில் மூன்று வேதங்களும் அத்யயனம் செய்தவர். சுவாமிகளை முதன்முதலில் சந்தித்தபோது, 'யாரோ ஒரு மகான்' என்ற அளவில் நினைத்தார். 'நவில் தொறும் நூல் நயம் போலும் பயில்தொறும் பண்புடையாளர் தொடர்பு'' என்ற

பொன்மொழிப்படி, பழகப்பழக மிக நெருக்கமுடைய வராகித் தாமே அருட்சட்டம் மேற்கொண்டனர். பல அருள் நிகழ்ச்சிகள் நடக்கத் தலைப்பட்டன. அன்னை அவர்களும், ஐயர் அவர்களும் தங்கள் தங்கள் நிகழ்ச்சிகளைப் பரிமாறிக் கொண்டும், சுவாமிகளின் பெருமைகளைப் பேசிக் கொண்டும் இருப்பர்.

## i. வேத விளக்கம்

ஒருநாள் ஐயர், சுவாமிகளுக்கு உணவு பரிமாறிக் கொண்டே, "இவருக்கு வேதங்களைப் பற்றி என்ன தெரியும்? மூன்று வேதங்களை ஓதிய நமக்கே சில இடங்களில் ஐயம் உள்ளதே" என்று நினைத்தார், அன்றிரவு அவர் உறங்கும்போது சுவாமிகள் தோன்றி, நான்கு வேதங்களிலும் ஆங்காங்கு உள்ள சுலோகங்களை எடுத்துக் கூறி விளக்கியும், ஐயர் கொண்ட ஐயங்களைத் தெளிவாக்கியும் அருளினார்கள்.

விடியலில் விழித்தெழுந்த ஐயர்; "நாம் சுவாமிகளைப் பற்றி எண்ணியது தவறு. இவருக்கு எல்லாம் தெரிகிறது. பரப்பிரம்மமே இவ்வாறு உருவம் எடுத்து வந்துள்ளது" என்று எண்ணி, அச்சமும் வியப்பும் கொண்டு, உருகிய உள்ளத்தராய், அன்னை அவர்களின் இல்லம் சேர்ந்து சுவாமிகளை வணங்கினர்.

சுவாமிகள் வழக்கமான புன்சிரிப்புடன் அவரை நோக்கி, என்ன! வேதங்களில் ஐயம் தீர்ந்ததா! என்று வினவினர். ஐயர், தம்பிரான் தந்த அருட்பெருங் கருணையை வியந்து அஞ்சலி கூப்பி நின்று, "தங்கள் பெருமை அறியாது அயிர்த்தேன். மகான்கள் போற்றும் தங்கள் பெருமை என் அளவிற்றாமோ! தங்களுக்கு அடிமையாகும் ஈறில் பெருந்தவமுடையேன் ஆனேன். இப்பிறவிக் கொடுஞ் சூழல்

பிழைக்கும் நெறி அருளிச் செய்யுங்கள், "சாத்திரங்கள் கற்றாலும் தவவேடம் பூண்டாலும், சூத்திரங்கள் பாராதான் சுணங்கன்" என்ற அருள்வாக்கு உண்மையன்றோ? அறியாது மனத்தெண்ணிய பிழைபொறுத்தருள்வீர் ஐயனே என்று கசிந்து உருகி வேண்டி நின்றனர்.

எங்கும் நிறைந்த அகண்டாகார சச்சிதானந்த சொரூபமே இவ்வாறு மானிடரூபம் தாங்கி வந்துள்ளது என்ற செய்தியை அனைவரும் உணர்ந்தனர். அன்று முதல் ஐயர் சுவாமிகள் திருவடி நீங்காத் திருத்தொண்டரானார்.

## ii. திருவடிப் பூசை

மகான்கள் எழுந்தருளப் பெற்றாலே அந்த இடம் மகிமையுற்று விளங்கும் என்பது யாவரும் அறிந்த உண்மை. சுவாமிகள் பிள்ளையார் குப்பத்திற்கு எழுந்தருளி விட்டால் அவ்வீடு மிகப்பொலிவோடு விளங்கும். மங்கள வாத்தியம் முழங்கிக்கொண்டிருக்கும். அன்னை அவர்களின் இல்லத்தில் உள்ளவர் அனைவரும், அக்கம் பக்கம் உள்ளவர்களும், அருகில் உள்ள ஊர்களில் வாழும் அன்பர்களும், சுற்றத்தவரும் வந்து குழுமி, நீராடி, சுவாமிகளை வலம் புரிந்து வணங்கி வழிபடும் காட்சியின் சிறப்பைக் கூறவும் இயலுமோ? அவ்விடம் கைலாயம் போன்று விளங்கும்.

சிலர் நீராடுவர், சிலர் மலர் ஆய்வர், சிலர் துதிபாடுவர், சிலர் பாராயணம் செய்வர். சிலர் நிட்டை புரிவர். இவ்வாறாக அத்திரு மாளிகை எழில் மிகப்பெற்றுத் திகழும். அன்னை அவர்கள் அக்காலங்களில் சுவாமிகளை உபசரிப்பதிலேயே முழுமூச்சுடன் ஈடுபட்டிருப்பார்கள்.

காலையில் நீராடி வழக்கப்படி நிட்டையமர்ந்து, விநாயகர் பூசை முடித்து, சுவாமிகளுக்குத் திருவடிப் பூசை ஆற்றுவதற்கான பால், தயிர், இளநீர், எலுமிச்சம்பழம், பஞ்சாமிர்தம் முதலியன பக்தி சிரத்தையோடு பெரிய தாம்பாளத்தில் வைத்துக் கொள்வர். தோட்டத்தில் உள்ள மலர்களைக் கொய்து ஆய்ந்து, வகை வகையாக மாலைகள் தொடுத்து வைத்துக்கொள்வர். அடியார்களுக்கு உணவுக்குத் தேவையான ஏற்பாடுகளைக் கவனிப்பர்.

சுவாமிகள் திருக்கண் மலர்ந்தபின் அவர்களுக்கு நீராட்டி, தூய ஆடை அணிவித்து, நாற்காலியில் அமரச்செய்து முறைப்படி திருவடிப்பூசை செய்வார்கள். உலகை உய்விக்க வந்த அத் தெய்வத் திருவடிகளைத் தீண்டிப் பூசை செய்யும் பேறு நம் அன்னை அவர்களுக்குக் கிட்டியது, முன்னை நல்வினைப் பயனே என்பதில் ஐயமுண்டோ?

### iii. அருளுரையால் தெளிவுறுதல்

காலை 9 மணிக்கெல்லாம் ஐயர் அவர்கள் அத்தியந்த அன்போடு உணவு கொண்டு வந்து சுவாமிகளுக்கு ஊட்டுவர். ஆகாரம் ஆனதும், அனைவரும் உறங்குகையில், அன்னை அவர்கள் சுவாமிகளுக்கு அருகில் நின்று விசிறியால் மெதுவாக வீசி இளைப்பாற்றுவார்கள். அவ்வமயம் சுவாமிகள் தம் திருவாய் மலர்ந்து, உயர்ந்த வேதாந்தக் கருத்துக்களைக் கூறுவார்கள். முன்பே பாகவதம், பக்த விஜயம் போன்ற அருள் நூல்களைக் கற்றுப் பண்பட்ட உள்ளம் கொண்ட அன்னை அவர்கள் சுவாமிகள் கூறும் கருத்துக்களைத் தலை மாணாக்கன் நிலையில் இருந்து, அறிந்து போற்றி மனத்தில் இருத்திக்கொள்வார்கள்.

### iv. அருட்பாடல் எழுதினமை

சுவாமிகள் தம் குயில் போன்ற மெல்லிய குரலில் அருட்பாடல்களை இசைப்பதும் உண்டு. அன்னையார் அவற்றைக் கேட்டு ஆனந்திப்பார்கள். ஒருமுறை சுவாமிகள் அன்னையாரப் பார்த்து, 'தாய்க்குத் தமிழ் எழுதத் தெரியுமோ?" என்று வினவினார்கள். அன்னை அவர்கள் 'சுமாராக எழுதும்' என்று பதில் கூற 'பாடல் எழுதட்டும்' என்று அருளிச்செய்தார்கள். அவ்வாறு சுவாமிகள் பாட அன்னை அவர்களால் முதல் முதல் எழுதப் பெற்ற பாடல் 'பூத்திருக்கும் சோலையிலே' என்று தொடங்கும் அருட் பாடலாகும். இப்படிப்பட்ட அருட்பாடல்களைச் சுவாமிகள் இன்னிசையுடனும், திருக்கரத்தால் தாளமிட்டுக் கொண்டு பாட, அவ்வருள் திருவமுதைச் செவியாரப் பருகி ஆனந்தித்த நம் அருளன்னை அவர்கள் அருமையாக எழுதலானார்கள்.

இறைவனின் அருட்பெருங் கருணை இவ்வாறு ஊற்றெடுத்து நம் போன்றவர் உய்யும் பொருட்டு அருட்பாடல்களை தவத்திரு. அன்னை அவர்கள் மூலம் எழுதச் செய்து வெளிப்படுத்தவில்லை யென்றால், ஆண்டவரின் அருட்பாடல்களை யாரே அறிந்து போற்றி உய்ய இயலும்? இப்பாடல்களையும் மற்றும் பல அடியார் பாடல்களையும் தொகுத்துப் பிற்காலத்தில் ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் சங்கச் செயலராக இருந்த திரு. ஆ. நரசிம்மலு நாயுடு சுவாமிகள் அச்சிட்டு வெளியிட்டுள்ளார்கள்.

### v. தலை அன்பின் தகு சிறப்பு

அன்னை அவர்கள் சுவாமிகளுக்குப் பணிவிடை செய்வதிலேயே கவனம் முழுவதும் செலுத்தினவராய் உண்பதையும் உறங்குவதையும் மறந்து இருப்பர். சுவாமிகள்

எத்தனை நாள் தங்கியிருந்தாலும் அன்னை அவர்கள் நீரும் பருகாது சேவை புரிவார்கள்.

'உருகி நான் உனைப் பருக வைத்தவா!' என்ற திரு வாசகப்படி உள்ளம் குழைந்து உருகி அமுத ஊற்று நிறையப் பெற்றால் உணவேதுக்கு? உறக்கமேதுக்கு! தெய்வீகப் பொலிவால் அன்னை அவர்கள் திருமுகத்தில் அருளொளி வீசும். சோர்வோ, வாட்டமோ, சிறிதும் இன்றி, உற்சாகத்துடன் காணப்படுவர்.

புலன்களின் வழி மனம் ஈடுபட்டால்தான் இவ்வுலக இச்சைகள் ஆன்மாவைப் பிணைக்கும். மனம் உடையவனிடம் வைத்த பின்பு புலன்கள் அடங்கி ஒடுங்கி நிற்கின்றன. மனம் அடங்கப் பெற்றவர்கள் எதையும் சாதிக்கும் திறமை பெற்றவர்கள் ஆவர். மனத்தை சுவாமிகளின் இணையடி மலர்களில் வைத்து வாழ்ந்த அன்னை அவர்கள் பசியையும் தூக்கத்தையும் மறந்து இருத்தலில் வியப்பென்ன உளது? பின்னர் சுவாமிகளைப் போன்றே ஆண்டுக் கணக்கில் தவம் இருக்கப் போவதன் அடிப்படை இதுவோ என்று எண்ண வேண்டியுள்ளது.

### vi. அருட்சட்டச் சட்டாம் பிள்ளை

இவர்களது தலை அன்பின் தகு சிறப்பினை உணர்ந்த சுவாமிகள் அருள் கனிந்து ஆசி கூறியருளுவார்கள். அருட் சட்ட மாண்பை அகில முழுமைக்கும் வழங்க வல்ல ஆற்றல் பெற்றவர் என்பதை எடுத்துக் கூறி மகிழ்வார்கள். ஆண்டவன் அருளை அனைவர்க்கும் வழங்க வல்ல அருமை அடியவர் என்று அகமிக மகிழ்வார்கள். உடையவனது சட்டத்திற்கு உயர்வு கூட்டுவிக்க வல்ல **உண்மைச் சட்டாம்பிள்ளை** என்று களிப்பார்கள். சட்ட வளர்ச்சிக்கு இவ்வூர் தலைநகர் போல விளங்கும் என்று அருளாசி வழங்கினார்கள்.

## vii. குருஅருளால் நோய் தீர்ந்தமை

ஒரு முறை சுவாமிகள் பிள்ளையார் குப்பத்திற்கு எழுந்தருளியிருந்தார்கள். அன்னை அவர்களின் சிறிய மாமியார் திரு. அமிர்தாம்பாள் அவர்களுக்கு மண்டைக் கருப்பான் பல ஆண்டுகளாகத் தீரமுடியாத வியாதியாக இருந்தது. பாபு ரெட்டியாரின் அண்ணார் மருமகள் மங்கையம்மாளுக்கு சுவாசகாசம் விடாது இடைஞ்சல் தந்து வந்தது. சுவாமிகளிடம் இருவரும் சென்று வழிபட்டு முறையிட்டனர். அனைத்துப் பிணிகளையும் நீக்கும் அரும் பெருந் திட்டமான அருட்சட்டம் மேற் கொண்டு ஒழுகுங்கள் திருநீறுபூசுங்கள்; தீராத நோய்களைத் தீர்க்கும் அருமருந்து அதுவே; என்று அருட்சட்ட மாண்பினையும், திருநீற்றின் மகிமையையும் சுவாமிகள் இனிது விளக்கினார்கள்.

முன்பு ஆனத்தூரில் நடைபெற்ற அற்புதங்களைக் கேள்வியுற்றும், கண்டும், இருந்தவர்கள் ஆதலால் சுவாமிகளின் திருவாக்குப்படியே அருட்சட்டம் ஏற்றனர். சுவாமிகள் தேய்த்துக் குளித்த கல்பம் கலந்த தேங்காய் சாந்தின் துகள்களைத் திரட்டி நோயுற்றவர்களுக்குக் கொடுக்க, அவர்கள் அதைத் தேய்த்துக் குளித்தபின் நோய் முற்றிலும் நீங்கியது.

## viii. விநாயகர்க்குச் சக்தி கூடினமை

பிள்ளையார்குப்பத்தில் ஸ்ரீ வரசித்தி விநாயகர் என்ற திருநாமத்துடன் கணேசப் பெருமான் அமர்ந்து அருள் பாலித்து வருகிறார். சுப்ரமண்ய சாஸ்திரிகள் அப்போது அக்கோயிலுக்குப் பூஜை புரிந்து வந்தார். திருக்கோயில் பழுதாகி இருந்ததால் திருப்பணி செய்து கும்பாபிஷேகம் நிகழ்த்த நாள் குறிப்பிட்டு இருந்தார்கள். அவ்வமயம் சுவாமிகள் பிள்ளையார்குப்பத்திற்கு எழுந்தருளினார்கள்.

நம் அன்னை அவர்களும் சாஸ்திரிகளும் சுவாமிகளைப் பணிந்து, இவ்விநாயகர் சிரமேல் தங்கள் திருக்கரத்தினைச் சூட்டி, சக்தி அதிகரிக்கச் செய்ய வேண்டும் எனக்கேட்டுக் கொண்டனர். சுவாமிகளும் அருளோடு இசைந்து அன்றிரவு சாஸ்திரிகளுடன் கோயிலுக்குச் சென்றனர்.

சாஸ்திரிகளை மண்டபத்தில் இருத்தி சுவாமிகள் கர்ப்பக்ருஹத்துட் சென்று கதவை மூடிக் கொண்டனர். சற்றுநேரம் பொறுத்து சாஸ்திரிகள் கதவு இடுக்கின் வழியாக உள்ளே நோக்க சுவாமிகள் அளவு கடந்த பேரொளியுடன் விநாயகப் பெருமான் சிரமீது தம் திருக்கரத்தைச் சூட்டிய வண்ணம் திகழ்ந்ததைக் கண்டு கண் கூசியவராய், சொல்லொணா வியப்பை அடைந்தனர்.

## ix. ஐயர் பெற்ற பெரும் பேறு

இத்தகைய பேரருட் பிழம்பாகிய சுவாமிகளைக் கட்டித் தழுவிக்கொள்ளும் மாபெரும் பாக்கியம் நமக்குக் கிடைக்குமா எனக் கருதினர். ஆயினும் எவ்வாறு சுவாமிகளிடம் தம் விருப்பத்தைக் கூறமுடியும் என அஞ்சி யிருந்தனர். அனைத்துயிரின் உள்ளத்திலும் அமர்ந்திருந்து அருள் புரிந்து பேணும் வள்ளற் பெருமானாகிய சுவாமிகள் அதை அறியாரா? தம் அருட் செயல் முடிந்தபின் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்த சுவாமிகள், ஒருபடியில் தம் திருவடி வைத்து வழுக்குவது போல் சாய்ந்தனர். அப்போது நம் சாஸ்திரிகள், சுவாமீ! என ஆண்டவரைப் பிடிக்க ஆண்டவர் ஐயரைக் கட்டித் தழுவிக் கொண்டு பேரருள் பாலித்தனர். புன்முறுவல் பூத்த திருமுகத்துடன் திகழும் சுவாமிகளின் திருவடி மலர்களில் ஆனந்த பாஷ்பம் பெருகப் பணிந்து எழுந்து போற்றிய ஐயர், தம் எண்ணத்தை உணர்ந்து அதை நிறைவேற்றவே ஆண்டவர் இவ்வாறு செய்தனர் என்பதை

எண்ணி எண்ணி இயம்பொணாப் பேரின்ப மெய்தினர். பிற்காலத்தில் வழிகாட்டும் வான்பொருள் நூலை எழுதிய திரு. கீ. இராமலிங்கனார் அவர்களிடம் இச் செய்தியை மிக ரகசியமாகக் கூறி மகிழ்ந்தனர். அவ் விநாயகமூர்த்தி இன்றும் அளவுகடந்த சக்தியுள்ளவராய் விளங்கி, அடியவர், அன்பர்கட்கு அருள்பாலித்து வருகிறார்.

## x. அன்னையார் கனிவுறல்

சித்தி நகர் எனும் பிள்ளையார் குப்பத்தில் சுவாமிகள் அருட் சித்துக்கள் பல ஆற்றியுள்ளார்கள். அனைத்திலும் மேலான அருட்செயல், நம் அன்னையாரைப் பக்குவமாக்கியது தான். தம்பிரான் பணி மேற்கொண்டு, அண்டர்பிரான் சீரடியாராய், இன்புறு வேதகத் திரும்பு பொன்னானாற் போல், யாக்கைத் தன் பரிசும், வினையிரண்டும், சாரும் மலம் மூன்றும் அற, அன்புப் பிழம்பாய்த் திகழ்ந்தார்கள். “குருவைக்கண் டடிபணிந் தேத்துவாய்: இருவினை பற்றா துனை விட்டுப் போகும்” என்ற அருள் வாக்குப்படி குருநாதர் தம் பணியைத் தலையாய பணியாகச் செய்து வந்தார்கள்.

## xi. பிரிவாற்றாமை

சுவாமிகள் பிள்ளையார் குப்பத்திலிருந்து, மற்றுள்ள அடியார்களுக்குத் தரிசனம் தர, வேறு ஊருக்குப் புறப்பட்டுச் செல்லும்போது, நம் அன்னையார் படும் பாட்டை எங்ஙனம் எடுத்துக்கூற இயலும்? நீடிய சோகத் தோடு வழி கூட்டியனுப்புவார்கள், கஷ்டப்பட்டுத் தேடிய கருந்தனத்தையெல்லாம் கள்வர் பறிக்குக் கொடுத்த தனவந்தர் போல ஏங்குவர். உள்ளம் கவர் கள்வரான சுவாமிகளுடன் உள்ளம் சென்றுவிடும். நினைப்பவர் மனம் கோயிலாக் கொண்டவரான பெம்மான் ஏதும் அறியாதவர் போன்று வண்டியேறிச் சென்றுவிடுவர்.

வழியனுப்பிவிட்டு, உள்ளே சென்று படுக்கும் அன்னையார் நாள் கணக்கில் எழுந்திருக்க மாட்டார்கள். காலை ஸ்நானத்தோடு சரி, ஊணும் உறக்கமும் இன்றி, கலங்கி வருந்துவர். "மீண்டும் குருநாதரை எப்போது காண்பது? அவர் தம் இனிய மொழிகளை எப்போது கேட்பது? என்னைக் கடைத் தேற்ற வந்த கருணாமூர்த்தி எங்கே? அவர் அமர்ந்திருந்த கூடம் வெறிச்சோடிக் காணப்படுகிறதே" என்று பலவாறாய் எண்ணி எண்ணி ஏங்குவர்.

தான் உண்ட உணவை மீண்டும் வாய்க்குக் கொண்டு வந்து அசைபோடும் பசுவைப் போல், சுவாமிகள் கூறியருளிய வேதாந்தக் கருத்துக்களையும், அருட் பாடல்களையும் நினைவுபடுத்திப் பார்ப்பார்கள்.

இதுவரை எந்த மகானும் இதுபோன்ற அருள் நெறியைப் போதிக்க வில்லையே! இவர் கூறும் வழி எளிய வழியாக உள்ளதே! இல்லறத்தார்க்கும் எளிய வழி கூறுகின்றாரே. பெண்களுக்கு வேதாந்தக் கருத்துகளைக் கூறி, யாரே தெருட்டுவர்? அருமையான பொக்கிஷத்தை நமக்கு அளித்துள்ளாரே! "உயிர்கள் பெற்ற கதி முற்பிறவியிற் செய்பவம் இச்செனனம்" என்று பிறப்பு வந்த விதத்தை அருளினாரே!" "பேயுலக மீதுறவை நீ விடுவையேல், உயர்வு பெற்றிடுவை" என்று பற்றுகளை அறுக்க வைத்தாரே!" "உருகி, ஆவி பொருள் காயமொடு தானமே கை மாறெனவும் அத்தனடியைத் தொழுது தத்தமிடுவாய்'' என்று அருளினாரே! மீண்டும் எப்போது அவர்தம் பொன்னார் திருவடிகளைக் காண்போம்; பூசிப்போம்; சிரமேற் சூடுவோம்? என்று பலவாறாய் எண்ணி எண்ணி ஏங்கிச் சிறிது சிறிதாய்த் தெளிவு பெறுவார்கள். எந்தையின் அருள் தான் அவர்களை ஏன்று எடுத்து ஆற்றி ஆளாக்கும்.

## xii. ஆண்டவர் வரவை மீண்டும் எதிர்நோக்கல்

சுவாமிகள் வந்து சென்று ஒரு மாதம் இரண்டு மாதம் ஆகிவிட்டால், "சுவாமிகள் எங்குள்ளார்களோ? எப்பொழுது எழுந்தருளுவார்களோ" என்ற ஆவல் எல்லா அடியார்கள் உள்ளங்களிலும் எழும். சுவாமிகளை எதிர்பார்த்தபடியே இருப்பார்கள்.

"அருட் சட்டச் சட்டாம் பிள்ளை" என்று சுவாமிகளாலேயே தேர்ந்தெடுக்கப் பெற்ற நம் அன்னை அவர்களின் நிலையைக் கூறவும் வேண்டுமோ? குருநாதரைக் காணும் அவாவினாலே ஏக்கம் கொண்டு, உண்ணவும் தோன்றாமல் பூர்ண விரதமாகவே இருந்து விடுவதும் உண்டு.

தமக்கோ, பிறர்க்கோ ஏதாவது இடுக்கண்கள் நேர்ந்து தம்மால் தெளிவித்துக் கொள்ள இயலாத சூழ்நிலை ஏற்படும் போதும், வாசல் வெளியில் வந்து ஆகாயத்தை நோக்கியவாறே குருநாதரை உறுத்து நினைப்பார்கள். உடனே கருடன் ஆகாயத்தில் சங்க நாதத்துடன் மும்முறை வட்டமிடும். அண்மையில் வட்டமிட்டால், குருநாதர் விரைவில் வருவார் என்றும், சேய்மையில் வட்டமிட்டால் சில நாள் கழித்து வருவார் என்றும் உணர்ந்து ஆறுதல் அடைவார்கள். என்னே அவர்களின் நம்பிக்கை! அவ்வாறே சுவாமிகள் காட்சி கொடுப்பார்கள்.

அனைவரும் வியப்பர்; அன்னை அவர்களின் மகிழ்ச்சி கரைபுரண்டு ஓடும்; உள்ளம் துள்ளும்; அண்ணலின் கருணையை வியந்து போற்றுவர். அனைவர் உள்ளத்திலும் அமர்ந்து அருளாட்சி புரிந்துவரும் ஆனந்த தாண்டவ மூர்த்தியாகிய குருநாதர், அடியார்கள் எண்ணும் எண்ணங்களையும், அவர்கள் உள்ளத்து ஊறும் அன்பின் தன்மையையும் அறிய மாட்டார்களா?

அன்னை அவர்கள் சுவாமிகளின் பரங்கருணையைப் பன்னிப் பன்னிப் பேசுவர்; உன்னி உன்னி உருகுவர். அவர்களின் கவலைகளும், மேற்கொண்டிருந்த வேலைகளும் அவரது மனத்தைவிட்டு மறைந்து விடும். குருநாதரை வரவேற்பதிலும் அருகிருந்து அத்யந்த அன்போடு உபசரிப்பதிலும் அவர்கள் உள்ளம் ஊன்றிக் கிடக்கும்.

### xiii. என் வழி உனக்குத்தான்

ஒருமுறை அன்னை அவர்கள் சுவாமிகட்குப் பணிவிடை செய்து கொண்டிருந்த போது ஏதோ கேட்க வேண்டும் என்றும், எவ்வாறு கேட்பது என்றும் தயங்கி னார்கள். சுவாமிகள் இதை உணர்ந்து, "தாய்க்கு என்ன வேண்டும்?" என்று வினவினார்கள், உடனே அன்னை அவர்கள் "**இந்தப் பிறவியிலேயே இறவா நிலை அடைய வேண்டும்**'' என்று வேண்டினார்கள். "**அதற்கும் தடையா தாய்**" "**என்ன குற்றம் செய்தாலும் என்வழி உனக்குத் தான்**'' என்று அருள் வாக்குக் கொடுத்தார்கள். அதுபோன்றே தற்போது நம் அன்னையார் அருளாட்சி புரிந்து வருகிறார்கள்.

நம் அன்னை அவர்களின் வேண்டுகோளுக்கிணங்கி ஒருமுறை ஆண்டவர் திருவுருவப்படம் ஒன்றைத் தம் திருக் கரங்களால் அன்னை அவர்களிடம் கொடுத் தருளினார்கள். அப்படமே தற்போது பிள்ளையார் குப்பத்தில் அருட்சக்தி சந்நிதியில் பிரதான படமாகப் பூஜையில் இருந்து வருகிறது.

பிள்ளையார் குப்பத்தில் சுவாமிகள் எழுந்தருளி, எத்தனை நாட்கள் தங்கியிருந்தாலும், நம் அருள் அன்னையார் நீரும் பருகாது, பூர்ண உபவாசமாகவே இருந்து, ஆண்டவர்க்கும் அடியவர்க்கும் ஆவன கவனித்து வருவர். இவ்வுண்மையை அறிந்த நம் அன்னையின் மாமனார், சுவாமிகள் புறப்படும் சமயத்தில் வண்டியருகில்

வந்து. "ஒரு குடும்பத்தில் உள்ள மருமகள் இப்படி நீரும் பருகாமல் பட்டினி கிடந்தால், குடும்பம் என்ன ஆவது?" என்று வினவினர். நம் அருளன்னை அவர்களின் பக்குவ நிலையை உணர்ந்த சுவாமிகள், அவரை நோக்கி "ஒரு குடும்பத்தைக் கெடுக்க சுவாமி வராது; நம்ம சொர்ணத்துத் தாயின் சிறப்பு இப்போது உலகத்திற்குத் தெரியாது, நாள் செல்லச் செல்ல அவர்கள் குடும்பத்திற்கும், ஊருக்கும், உலகத்திற்கும் ஒளி விளக்காக விளங்குவார்கள்" என்று அருளிப் புறப்பட்டுச் சென்றார்கள்.

## xiv. வேளையோடு பூஜையும் உணவும்

பிள்ளையார் குப்பத்தில் பூஜை, சுவாமிகட்கு ஆகாரம், அடியவர்க்கு உணவு ஆகிய அனைத்தும் வேளை தவறாமல் நடக்கும். சுவாமிகள் செல்லுமிடங்களில் இதுபற்றி எடுத்துக் கூறுவதுண்டு. இராமநாதபுரம் ராஜா அரண்மனையில், சுவாமிகளால் ஆட்கொள்ளப் பெற்ற திருமதி சீதாலக்ஷ்மி நாச்சியார், திருமதி சிந்தாமணி நாச்சியார் போன்ற பல அடியார்களிடம் "பிள்ளையார் குப்பத்தில் வேளையோடு பூஜை; வேளையோடு ஆகாரம்; அங்கு போனாலே சாமிக்கு ஒருபிடி அதிகம் தான்" என்று மகிழ்ச்சியோடு கூறியுள் ளார்கள். அந்த ஆச்சிமார் இருவரும் நம் அன்னையார்க்கு இச்செய்தியைக் கடித மூலம் தெரிவித்துள்ளார்கள்.

உணவையே வெறுத்துத் தவம் மேற்கொண்ட சுவாமிகளா உணவின் மீது பற்றுக் கொள்வார்கள்? செல்லும் இடங்களில் எத்தகைய உணவு பரிமாறினாலும், அதைத் தம் திருக்கரங்களால் தீண்டியருளி, பலநாள் உணவில்லாமலே இருப்பவர்கள் சுவாமிகள், அவர்கள் இவ்வாறு ஏன் அருளிச் செய்தார்கள் என்பது பின்னால் விளங்கிற்று.

உணவே செல்லுபடி இல்லாதவர்களும், பிணியாளர் களும், ஏனையரும் பிள்ளையார்குப்பம் வந்தால், அக்குறைகள்

நீங்கி, நன்றாக உணவு அருந்துவார்கள். இன்றும் அந்த அற்புதம் நடந்து வருவது, அன்று சுவாமிகள் தந்தருளிய அருள் வாக்கினால் என்பதை அனைவரும் உணருகின்றனர்.

## 11. வாணியம்பாடி உத்ஸவம்

சுவாமிகளுக்குத் தமிழ் நாடெங்கும் பல உத்ஸவங்கள் நடந்துள்ளன. அவ்விழாக்களில் வாணியம்பாடியில் நடந்த உத்ஸவம், சுவாமிகள் உலாவும் காலத்தில் இறுதியாக நடைபெற்ற உத்ஸவ மாகும்.

சுவாமிகள் வாணியம்பாடிக்கு எழுந்தருளும் போது, வழியில் பிள்ளையார்குப்பத்தில் தங்கி, அன்னை அவர்களை உத்ஸவத்திற்கு வரும்படி நேரில் அழைத்துச் சென்றார்கள்.

சுவாமிகளின் அழைப்பிற்கிணங்கி, திருசாத்தனூர் சாமியின் தம்பி திரு. முத்து நாராயணரெட்டியாரும், நம் அன்னையாரும், அவர்களின் தாயாரும், திரு. ஆ. நரசிம்மலு சுவாமி அவர்களும், வாணியம்பாடி உற்சவத்திற்குச் செல்வதற்காகத் திருசாத்தனூரிலிருந்து விழுப்புரத்திற்கு வண்டியில் சென்றார்கள். வழியில் திருடர்கள் 15, 16 பேர் வழிமறிக்க வந்தனர். ஏராளமான நகைகள் அணிந்திருந்ததால் அச்சத்திற்கு அளவில்லை. கைக்கு எட்டும் தூரத்திலே திருடர்கள் வந்தும், வண்டியில் இருந்தவர்கள் குருநாதரின் திருவடிகளையே சிந்தித் தமையால், “போக்கு வண்டியடா இது; இதில் யாருமில்லை” என்று அவர்களே சொல்லிக் கொண்டு போய்விட்டனர்.

### i. விபூதி தந்தமை

விழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. மாலை 5 மணிக்குத் தொடங்கிய ஊர்வலம்; மறுநாள் விடியல் 4

மணிக்குப் பூர்த்தியாயிற்று. நம் அன்னை அவர்களும் ஊர்வலம் முழுவதற்கும் உடனிருந்து சுற்றி வந்தார்கள். சுவாமிகள் நம் அன்னையாரை அழைத்து, அருகில் இருந்த விபூதி மூட்டையை எடுத்துக் கொடுத்து, தலைக்கு அணையாக வைத்துக் கொள்ளப் பணித்தார்கள். அன்றே அன்னை அவர்களுக்கு விபூதி மகிமையை அளித்து அருள் செய்தார்கள் போலும்! இன்றும் பிள்ளையார் குப்பத்தில் விபூதி விலாசம் விளங்கி வருகிறது.

அன்னையார் அந்த நாட்டு அரிசியை உண்ண மாட்டார்கள் என்று கருதிய சுவாமிகள். நம் அன்னையாருக்காக மெல்லிய அரிசியை அடியார்கள் மூலம் தருவிக்க ஏற்பாடு செய்திருந்தார்கள். தமக்காகச் சுவாமிகள் இத்தகைய ஏற்பாடு செய்ததை எண்ணி உளமுருகிய அன்னையார், இச்செய்தியை அடியார்களிடம் உருக்கத்தோடும் கூறுவதுண்டு.

## ii. "அடியார் விஷயம் தாயிடம், தாய் விஷயம் சாமியிடம்"

அடியார்களைக் காப்பதில் கண்ணும் கருத்துமாக இருக்கும் சுவாமிகளுக்கு ஈடாக யாரைக் கூற முடியும்? "அடியார்கள் விஷயம் தாய் இடத்தில்: தாய் விஷயம் சாமியிடத்தில்" என்று சுவாமிகள் அருளிச் செய்துள்ளார்கள்.

வாணியம்பாடி உத்ஸவத்திற்குத் தாய் அவர்களுடன் வந்திருந்த அடியார்கள், தங்கள் நகைகளைக் கழற்றி அன்னை அவர்களிடம் கொடுத்துவிட்டு, நீராடச் சென்றனர். சுவாமிகள் நம் அன்னையாரைப் பார்த்து. "இவற்றைப் பத்திரமாகத் தாய் பார்த்துக் கொள்ளுமா?" என்று வேடிக்கையாகக் கேட்டார்கள். அரும்பெரும் பொக்கிஷமாம்

அருள் ஞானச் செல்வத்தைப் பத்திரமாகப் பாதுகாத்து, அருள் ஆட்சி நடத்த வந்த அன்னை அவர்களுக்கா இந்த நகைகளைக் காக்கத் தெரியாது? அன்னை அவர்களின் பெருமையை வெளிப் படுத்தவே சுவாமிகள் அவ்வாறு அருளிச்செய்தார்கள்.

### iii. தாய் வரவில்லையா?"

சுவாமிகள் இரெட்டியப்பட்டியில் அருளுலாவை முடித்துக் கொள்ளுமுன், இறுதியாகக் கடலூர் வழியே புகைவண்டியில் சென்றார்கள். அவ்வமயம் நம் அன்னை அவர்களுக்குக் கடித மூலம் தெரிவித்திருந்தார்கள். ஆனால் நம் அன்னை அவர்கள் செல்லாமல், அவர்களின் தாயாரை அனுப்பிவைத்தார்கள். புகை வண்டி நின்ற சமயம், சுவாமிகள் வெளியே வந்து, காத்திருந்த அடியார்களுக்குத் தரிசனம் தந்தார்கள். நம் அன்னை அவர்களின் தாயாரைப் பார்த்து, சுவாமிகள் "தாய் வரவில்லையா?" என்று ஏக்கத்தோடு கேட்டார்கள். அதற்கு அவ்வம்மை "அவர்கள் வரவில்லை: சுவாமிகளை அழைத்து வரும்படி வண்டிகட்டி அனுப்பி யுள்ளார்கள்" என்று கூறினர். சுவாமிகள் சிறிது யோசித்து, "இப்போது வருவதற்கில்லை: இன்னொரு முறை வருகிறது என்று கூறுங்கள்" என்று அருளிவிட்டுப் பயணமானார்கள். பின்னர் சுவாமிகள் பிள்ளையார் குப்பத்திற்கு வரவில்லை. அதை எண்ணி எண்ணி நம் அன்னையார் அடைந்த ஏக்கம் சொல்லும் தரத்ததன்று.

## 12. குருநாதர் அடக்கம்

சுவாமிகள் இரெட்டியப்பட்டியில் தாம் அவதாரமான இடத்திலேயே (1923) துந்துபிளு மார்கழிமீ 28ஆம் தேதி சுக்கிர வாரம் ஏகாதசி திதி அனுஷ நக்ஷத்திரம் இரவு நான்கு மணிக்கு அருள் அமைவு பெற்றார்கள்.

அவ்வமயம் நம் அன்னை அவர்களுக்கு நிகழ்ச்சி நடை பெற்றது. அவ்வாறே மயக்க நிலையில் அன்னை இருந்தார்கள். ஏனாதி மங்கலம் ஜெகதாம்பாள் அம்மாளுக்குத் தந்தி வந்தது. அவர்கள் மூலம் திருச்சாத்தனூர், மழவராய நல்லூர், பிள்ளையார் குப்பம் முதலிய ஊர்களுக்குச் செய்தி தெரிந்தது.

அன்னையார் ஆற்றொணாத்துயருற்றனர். என்னைக் கரையேற்ற வந்த கருணாமூர்த்தியை இனி நான் எப்போது காண்பேன்? பிறவிப் பிணி நீக்க வந்த பெருமானை எப்போது காண்பேன்? இல்லம் தேடி வந்து அருள் சுரந்த கருணா மூர்த்தியை எப்போது காண்பேன்? எனப் பலவாறாய்ப் பேதுற்றனர். சுவாமிகள் ஊனக் கண்ணுக்குத் தோன்றாமல் அடங்கி னாலும், உற்றுணர்ந்தால் தோன்றுவர் என அமைதியுற்றனர்.

சுவாமிகள் திருக்காப்பிட்டுக் கொண்ட இடத்தில் முதல் குருபூஜைக்குள் அடியவர் பலரின் ஆதரவாலும் ஆண்டவர் திருவருளாலும் திருக்கோயில் அமைக்கப் பெற்று, கும்பாபிஷேகம் செய்விக்கப் பெற்றது.

குருபூஜை விழாவும் அடியார் பெருமக்களால் செய்விக்கப் பெற்றது. ஆண்டுதோறும் மார்கழி அனுட விண்மீனில் இரெட்டியப்பட்டி சந்நிதியிலும் அடியார்களின் இல்லங்களிலும் குரு பூஜை விழா சிறப்பாக நடைபெறுகின்றது. நம் அன்னையார் இல்லத்திலும் சிறப்பான முறையில் கொண்டாடப் பெறுகின்றது.

ஒருமுறை நம் அன்னையார் அவர்கள் சில முக்கிய அடியார்களுடன் இரெட்டியப்பட்டிக்குச் சென்று குருபூஜை விழா தரிசித்து, மறு நாளும் சிறப்பான அபிஷேக ஆராதனை நிகழ்த்தி, பின்னர் குற்றாலம் சென்று சுவாமிகள் தவம் ஆற்றிய குகை தரிசனம் செய்துகொண்டு, மதுரை வந்து ஸ்ரீ பரிபூர்ண விநாயகரையும் தரிசனம் செய்துகொண்டு வந்தார்கள்.

# VI பூரண தவம்

## 1. குருவின் ஆணை

அன்னையார் அருட்சுட்ட நெறியில் அணுவளவும் தவறாமல், சிறப்பான முறையில் நிட்டையையும் பேணி வந்தனர். ஆண்டுகள் சில கடந்தன. பக்குவம் உற்ற நம் அன்னை அவர்களைத் தம் வழிக்கு ஈர்த்து, குற்றாலத்திலே தாம் இயற்றிய தவத்தை பிள்ளையார் குப்பத்திலேயே நடத்தச் செய்ய, அருட்பெருங்கருணை அருள சுவாமிகள் திருவுளம் கொண்டார்கள்.

உயர்ந்த தவ நிலையை அருளுமுன், சில மாதங்கள் அன்னை அவர்களின் உடம்பைத் தூய்மை செய்தார்கள். அப்போதும் அன்னை அவர்கள், உறுதியாக, ஆண்டவர் அருள் நெறியைப் போற்றி வந்தனர். உறவினரும் பிறரும் அளவிறந்த மனவருத்தம் அடைந்தனர். தாங்க இயலாத சிரமம் நேர்ந்த போது, நம் அன்னை அவர்கள் ஆண்டவரை உறுத்து நினைந்து "சுவாமி! என்னை ஏன் இப்படி சிரமப் படுத்த வேண்டும்? தங்கள் திருவடியிற் சேர்த்துக் கொள்ளத் திருவுளமிருந்தால் சிரமம் தராமல் சேர்த்துக்கொள்ளுங்கள்" என்று வேண்டினர். உடனே ஆண்டவர் "தாயைக் குடல் விளக்கம் செய்த தாமோதரனை" என்ற கோதைப் பிராட்டியின் அருள் வாக்கை நினைவூட்டி, அன்னையின் திருமேனியைத் தூய்மை செய்வித்ததாக விளக்கம் அருளினார்.

ஒரு நாள் நிகழ்ச்சியில், ஒரு மலை மீதுள்ள குகையில், நெருப்பின் நடுவில் நம் அன்னை அமர்ந்து தவம் செய்வது போல் நடந்தது.

## 2. ஏற்க மறுத்தல்

இவ்வளவு கடுமையான தவம் நம்மால் இயற்ற இயலுமா? சுவாமிகள் ஆண். அவர் குற்றாலத்தில் கடுந்தவம் ஆற்றினர். நாமோ பெண். நமக்கு ஒரு மகன் உள்ளான். இல்லத்தில் பலர்க்கும் அடங்கி நடக்க வேண்டிய நாம் எவ்வாறு தவம் செய்வது? என்று எண்ணிய அன்னையார் கலக்க முற்றனர். அப்போது நம் அன்னை அவர்களின் கணவனார் இறைவனடி அடைந்து சில ஆண்டுகளே ஆகியிருந்தன.

## 3. இறுதி முடிவு

மேலும் மேலும் அதே நிகழ்ச்சி பல முறை வந்து வற்புறுத்தவே, அச்சம் கொண்ட அன்னை அவர்கள். "இனி இந்த உயிரைத் தியாகம் செய்து கொள்ள வேண்டும்" என்று எண்ணி, தம் வீட்டு கிணற்றின் மேல் ஏறி அமர்ந்து விட்டார்கள். அப்போது, இறையருளால் ஓர் எண்ணம் தோன்றியது. "இவ்வாறு நாம் உயிரை மாய்த்துக் கொண்டால், உடலைப் பலரும் கண்டு ஏசுவார்கள். அதை விட ஆண்டவர் காட்டிய குறிப்பின்படி இருந்து, இறக்க நேர்ந்தால், இறப்பது மேல், என்ற எண்ணம் தோன்றியது. இறங்கி வந்து விட்டார்கள். தமக்கு மிக நெருக்கமாகத் திகழ்ந்த **'கடுவனூர்தாய்'** என்னும் திருமதி. ராஜலக்ஷ்மியம்மையாரிடம் நிகழ்ந்ததைக் கூறினார்கள்.

## 4. நிர்விகற்பம்

ஒரு நாள் பூஜை அறையிலிருந்து நம் அன்னையார் வெளியில் வரக் கருதி வாயிற் படியருகில் வரும்போது "இந்த வாயிற்படி கடந்து வெளியில் செல்லலாகாது" என்ற ஆண்டவர் ஆணை பிறந்தது. அன்னையார் ஒன்றும் தோன்றாமல் திகைத்து நின்றனர். அப்போது ஆண்டவர்,

"நிருவிகற்ப சமாதியிற் புகும் நிஷ்டை தந்தருள்
அற்புதா! இனி எனக் கொன் றும் வேண்டாம் நின்
பதமல்லாமல் வேறு - எந்தையே" என்னும் அருட்பாடலின் அடிகளைக் கூறி, விளக்கம் அருளினர். உடனே நம் அன்னையார், ஆண்டவரின் திருவடிகளை மிக மிக உருக்கமோடு தியானித்த வண்ணம் நாற்காலியில் அமர்ந்தனர்.

முதலில், மூன்று மாதம் நிர்விகற்பம் தொடங்கியது. ஆகாரமோ, நீரோ, சிறிதும் பருகாது அவ்வறையில் அமர்ந்தார்கள் அன்னையார். கடுவனூர் தாய் அவர்கள் தினந்தோறும், நம் அன்னைக்கு வேளை தவறாமல் நீராட்டித் துடைத்து அப்படியே எடுத்து அமர்த்தி விடுவார்கள்.

## 5. அசையா உறுதி

தன்னிலையற்று, எல்லாம் இறைவன் செயலாக, ஆனந்த பரத்தோடு ஒன்றுவதற்கு மனத்தை ஒருமுகப் படுத்தி வந்தனர் நம் அன்னையார்.

ஒரு நாள் கரிய ஓர் உருவம் நம் அன்னை அமர்ந்திருந்த அறையின் வாயிற்படி யருகில் நின்றது. அன்னை அவர்கள் அஞ்சி, ஆண்டவரிடம் முறை யிட்டார்கள். **"ஆசைப் பிசாசைத் துரத்து; - ஐயன் அடியை - அனுதினம் நெஞ்சில் இருத்து"** என்ற அருட்பாடலின் அடிகள் அருளால் ஒலித்தன. உடனே சுவாமிகளின் திருவடிகளைத் தியானித்து அசையா உறுதியோடு இருந்தனர். அக்கரிய உருவம் மறைந்தது.

இவ்வாறு பலநிலைகளிலும், ஆண்டவர் தம் அருட்பாடல்களில் உள்ள பல சொற்றொடர்களைக் கூறித் தெருட்டி வந்தனர். கொஞ்சம் கொஞ்சமாக நிர்விகற்பம் ஆரம்பித்து இறுதியில் ஓராண்டாக ஆயிற்று.

## 6. தவத்தின் நிறைவு

இல்லமே குகையாக அமைந்தது. உற்றாரும் உறவினரும் மற்றாரும் கலங்கினர். என்ன ஆகுமோ என்று அஞ்சினர். திருச்சாத்தனூர் சுவாமிகள் மற்றும் சில நெருங்கிய அடியார்கள் மட்டும். "ஆண்டவர் இருக்க, பயமில்லை" என்று உறுதியாக நம்பினர். செய்தி தெரிந்து பல அடியார்கள் வரத் தொடங்கினர். பல அடியார்களுக்கு சுவாமிகள் நிஷ்டையில் நிகழ்ச்சிகள் காட்டி, அனுப்பி வைத்தார்கள். அன்னை அவர்கள் எலும்பும் தோலுமாகக் காட்சியளித்தார்கள். தவ ஒளி எங்கும் வீசிற்று, ஆனந்தமயமான பேரின்பத்தை நுகர்ந்து வந்தார்கள். உலக நினைவு அறவே ஒழிந்தது.

குண்டலி சக்தி மேலே ஏறி நின்றது. வாசியோகம் என்ற நிலையை எய்தினர். மாணிக்க வாசகர், அவ்வையார், வடலூர் வள்ளல், நம் சுவாமிகள் முதலிய பெருமக்கள் கண்ட வாசி யோகத்தை, இல்லறத்தில் வாழ்ந்த அன்னை அவர்கள் அடைந் தார்கள் என்றால், 'அவர்களின் முன்னை வினைப் பயனையும் இம்மை நற்பேற்றையும் அளவிட்டுரைக்க வல்லவர் யார்?'

**தவத்தின் படிகள் – 7**

| | |
|---|---|
| முதற் படி | : உலகப்பற்று அறுதல் |
| இரண்டாம் படி | : தேவர்களின் தரிசனம் |
| மூன்றாம் படி | : குண்டலி மேல் ஏறுதல் |
| நான்காம் படி | : குருதரிசனம் உள்ளே காணுதல் |
| ஐந்தாம் படி | : அமுதம் உண்ணுதல் |
| ஆறாம் படி | : ஸ்ஹஸ்ராார கமலத்தில் அருளுருவுடன் அமர்தல்; பரமாத்மா அங்கு உள்ளனர்; ஆத்மா அவருடன் கலத்தல்; இரண்டும் ஒன்றாதல். |

ஏழாம் படி : துரிய வெளியில் உலகைக் கடந்து நிற்றல்; பேரின்ப அனுபவம்

இந்த அருமை உணர இயலாத சிலர் "இந்த அம்மையார் இப்படி உயிர்க்குப் போராடுகிறார்களே! இது என்ன சாமி? இவர்கள் இனி எப்படிப் பிழைக்கப் போகின்றார்கள்?" என்று பலவாறாய்ப் பேசிக் கொண்டனர்.

அன்னையின் திருநயனங்கள் மெதுவாகத் திறந்தன. புதிதாகப் பிறந்த குழந்தை சுற்று முற்றும் பார்ப்பதுபோல் தாம் அமர்ந்த இடத்தை வெருண்டு நோக்கினர். அல்லல் தரும் மாயையாம் இப்பெரும் புவித் துன்பத்தில் வர மனம் இல்லாமல், மீண்டும் நயனங்களை மூடிக் கொண்டார்கள். அமிர்தத்தை நுகர்ந்த ஒருவன் எட்டிக்காயை நுகர விரும்புவானோ?

ஆனால், "அம்மையாரை உலகத்தில் பல ஆண்டுகள் உலவ விடவேண்டும்: பல அடியார்கள் அவர்கள் மூலம் தெருள் பெற வேண்டும்" என்று எண்ணிய பேரருள், அவர்களை இவ்வுலக நிலையில் ஆழ்த்தியது. மெதுவாக எழுந்தார்கள், தள்ளாடித் தடுமாறி நடந்தார்கள். மிக மெல்லிய குரலில் பேசினார்கள். அனைவரும் மகிழ்ந்தனர். பல வினாக்கள் கேட்டுத் துளைத்தனர். இறைவனோடு உறவாடி மகிழ்ந்த அந்த பேரின்ப நிலையை வாயினால் எடுத்துக் கூற இயலுமா? அல்லது காட்டத்தான் இயலுமா? இயன்ற வரை பதில் கூறினார்கள். சிலவற்றிற்குச் சிரித்து மழுப்பினார்கள். சிலவற்றிற்கு மவுனம் சாதித்தார்கள்.

இடையில் சில மாதங்கள் கழிந்தன. மீண்டும் மீண்டும் மனம் தவ நிலையையே நாடியது. ஆண்டவர் குறிப்பும் தொடர்ந்தது. மீண்டும் இரண்டரை ஆண்டு நிர்விகற்பம் மேற் கொண்டார்கள்.

## 7. உடன்பணி ஆற்றிய உத்தமத் தாய்

அன்னையார் நிர்விகற்பம் பேணியபோது, அருகிருந்து அயராது தொண்டாற்றிய பெரும் பேறு கடுவனூர் தாய்க்குக் கிட்டியது. இராமபிரான் காட்டுக்குச் சென்றபோது, அல்லும் பகலும் உண்ணாமல் உறங்காமல் உபசாரம் செய்த இளைய பெருமாள் போலவும், காளத்தி மலைமீது குடுமித் தேவருக்கு அத்யந்த அன்போடு ஆறு நாட்கள் உண்ணவும் உறங்கவும் மறந்து உபசரித்து உயர் கதி பெற்ற கண்ணப்ப நாயனார் போலவும், அருகே அமர்ந்து தினமும், காலையில் நீராட்டி, அத்யந்த அன்போடு அனைத்துப் பணிவிடைகளையும் புரிந்து அரும்பயன் பெற்றார்கள். அவர்கள் பெற்ற பேறுதான் என்னே!

"தொண்டர் பணி செய்பவர்கள் சூட்சாதி சூட்ச மெல்லாம், கண்டு தெளிவாரோடி - ஏ குயிலே காணாத காட்சியெல்லாம்" என்று ஆண்டவர் அருளிச்செய்தபடி, அன்னை அவர்கள் உள்ளே என்ன அற்புதக் காட்சிகளைக் கண்டு, களி கொண்டு உறவாடிப் பயன் பெற்றார்களோ, அந்தப் பயன் முழுதும், அருகே அமர்ந்து அரும் பணியாற்றிய அம்மை யாருக்கும் கிட்டியது. முன்னைத் தவப்பயன் முதிர்ந்து பயன் அளித்தது என்று கூறவும் வேண்டுமோ?

## 8. அருள் நிகழ்ச்சிகள்

அன்னை அவர்களுக்குத் தவ ரத்னமணி முடி சூட்டி, அஷ்ட திசை எங்கும் புகழ் சட்ட பரிபாஷைகளை அறிந்து உணரச் செய்தார்கள் சுவாமிகள். அன்னை அவர்கள் எந்த உயர்நிலையில் உள்ளார்கள் என்பதைத் தலை சிறந்த அடியார்களுக்கு நிகழ்ச்சி மூலம் உணர்த்தி வந்தார்கள் சுவாமிகள். அனைவரும் வந்து தரிசித்து, தாம் கண்ட நிகழ்ச்சிக் குறிப்புகள் உண்மையாக இருப்பதை அறிந்து வியந்தனர். மிக மிக மகிழ்ந்தனர். உளம் உருகிப் போற்றினர்.

பண்டைக் காலத்தில் முனிவர்களும், இருடிகளும் பாரத நாடெங்கும் தவம் புரிந்து, அருள் சக்திகளை உலகுக்கு அளித்தார்கள். அவர்களின் தவ சக்தி தான் இன்றளவும் பாரதம் தன் பண்டை நிலையில் குன்றாது ஒளிவிடச்செய்கின்றது.

ஆன்மீகத் துறையில் அவ்வப்போது புதிய புதிய மகான்கள் தோன்றி, அருள் நிலையைக் கூட்டி வந்துள்ளனர். வேதங்கள் கூறுகின்ற நெறியில் நடந்து, புலன்களை வென்று, இப் பாரத கண்டம் முழுவதையும் ஆண்ட யோகிகள் வெகுகோடி என்று ஆண்டவரே அருளியுள்ளனர்.

## 9. அருந்தவப் பொலிவு

தற்காலத்தில் இவ்வாறு கடுந்தவம் ஆற்றியவர்களை யாம் கண்டதில்லை. காடுகளிலும், மலைகளிலும் தவம் செய்வார்கள். இவ்வாறு வீட்டில் கூடத் தவம் செய்வார்களா? இது கலிகாலத்தில் நாம் காண்பதற்கரிய ஒரு காட்சி என்று அறிவறிந்த மக்கள் பேசிக் கொண்டார்கள்.

யார் வந்தார்கள்? என்ன பேசினார்கள்? என்று எதுவும் நம் அன்னை அவர்களுக்குத் தெரியாது. தபசீலராக அமிர்தம் உண்டு ஆனந்தப் பெருநிலையில் இருந்தார்கள். திருமேனி சுருங்கி, எலும்புக் கூடாகி விட்டது. தோலும் நரம்பும் ஒட்டிக்கிடந்தன. சிறு குழந்தையைத் தூக்கி வைப்பதுபோல் மெதுவாக ஆசனத் தமர்த்தி, நிதானமாக நீராட்டி, மிக்க பக்குவமாகத் துடைத்து, மீண்டும் ஆசனத் தமர்த்தி விடுவார்கள் **கடுவனூர் தாய்.**

செங்கோல் கொடுத்து, திருமுடிசூட்டி, 'இனி சட்ட நெறிக்கு நீ தான் வழிகாட்டி', என்று ஆண்டவர் அருளிச் செய்தபின், நாமெல்லாம் செய்த தவப் பயனின் விளைவாக அன்னை அவர்களுக்கு உணர்வு திரும்பியது. மெதுவாக

அசைந்தனர். திருக்கண் மலர்கள் திறந்தன. அருகிருந்தவர்கள் ஆனந்த மிகுதியால் குதித்துக் கூத்தாடினர். அன்னை அவர்கள் கொஞ்சம் கொஞ்சமாக வெளியே வந்து உலாவி வந்தார்கள். தாயார் வயிற்றினின்று பிறந்து வளர்ந்த தேகம் போய், புதிய புனித தேகம் தோன்றியது. உச்சி முதல் உள்ளங் கால் வரையில் தோல் உரிந்தது. புதிய தோல் உண்டாயிற்று. தலையில் உரோமம் கழன்றது. புதிய தலை முடி முளைத்தது. ஒளிவிடும் தூய திருமேனியும், இனிய சொல்லும், தத்துவம் நிறைந்த கருத்துக்களும், கேட்போரையும், காண்போரையும் ஈர்த்தன.

## *10.* அடியார்கள் வரவு

அடியார்கள் திரள்திரளாக வரத் தொடங்கினர். ஆண்டவர் அருளுலா செய்கையில், அடியவர் எவ்வாறு தங்கள் குறைகளைக் கூறி, அவை போக்கி நிறைவு பெற்றுச் செல்வார்களோ, அதுபோன்று, அன்னை அவர்களிடத்தும், பிணிகள் நீக்கம் பெறவோ, மனவருத்தம் நீங்கி அமைதி பெறவோ, வருவார்கள்.

அன்னை அவர்களின் தரிசனம் கிடைத்த போதே, பிள்ளையார் குப்பத்தின் எல்லையைச் சார்ந்த போதே, பிணிகளும், குறைகளும் நீங்கப் பெற்று நலம் எய்துவர். அவ்வளவு ஏன்? கடிதம் மூலம் தங்கள் குறைகளை எழுதி, நம் அன்னை அவர்களுக்கு அனுப்பிய ஞான்றே, கதிரவனைக் க்ண்ட பனிபோல் துன்பம் இருந்த இடம் தெரியாமல் ஓடிவிடும். அற்புதம், அற்புதம் என அடியவர் அகம் களிப்பர். அண்டை அயலாரிடம் கூறி மனமகிழ்வர். அன்னை அவர்களைத் தங்கள் குலதெய்வ மெனப் போற்றிப் பணிவர். இவ்வாறு தொடங்கி, அடியார்கள் தங்கள் ஐயங்களுக்கு விளக்கம் கோரும் ஒரு புகலிடமாகப் பிள்ளையார் குப்பப் பெருந்தலம் பிறங்கலாயிற்று.

# VII அருள் மணம் பரப்புதல்

## 1. வழிகாட்டும் வான்பொருள்

நம் பாரத நாட்டில் தோன்றி, அரும்பெரும் சித்துக்களைப் புரிந்த மகான்களின் சரிதம் அவ்வப்போதே எழுதப் பெறாமல், செவிவழிச் செய்தியாகவே உள்ளன. நம் சுவாமிகளின் திவ்விய வரலாற்றை அடியவர்களும், மற்றவர்களும் அறியவும், அவரது கொள்கைகளின் அருமைகளைப் போற்றிப் பற்றி ஒழுகவும் வேண்டும் என்று, நம் அருளன்னை அவர்களும், திருச்சாத்தனூர் சுவாமிகளும், மழவராயநல்லூர் திரு. ஆ. நரசிம்மலு சுவாமிகளும் மற்றும் பல அடியார்களும் கருதி, நூல் வடிவில் வெளியிடத் தீர்மானித்தனர்.

நம் அருளன்னையார் தந்த குறிப்புகளையும் சுவாமிகளின் அருட்பாடல்களையும், சட்டஅடியார்கள் உள்ள ஊர்களுக்குத் தாம் சென்று சேகரித்துவந்த செய்திகளையும் எடுத்துக் கொண்டு திரு நரசிம்மலு சுவாமிகள் காஞ்சிபுரம் சேர்ந்தனர். அங்குள்ள குமரன் அச்சக உரிமையாளர் திரு. த. குப்புசாமி முதலியார் அவர்களின் மூலம் 5-8-1936ல், சைதாப்பேட்டையில் நகராட்சி ஆணையராக இருந்த அருள் திரு. கீ. **இராமலிங்கனார்** அவர்களைக் கண்டனர்.

அவரது மொழித் திறமையும், சொல்வளம் பொருள்வளம் உடைய தமிழ்நடையும், சான்றோர்க்கு உரிய பண்பு நலங்களும், பன்மொழிப் புலமையும், சமய அறிவும், இளங்குழவியனைய இனியபான்மையும், நிறைகுடம் போன்று நிலவும் தன்மையும், நாடி வருவோர்க்கு நலம் செயும் சால்பும் கண்ட நம் நரசிம்மலு சுவாமிகட்கு அவரை மிகவும் பிடித்தது. நம் குருநாதரின் வரலாற்றினை மிக இனிய

முறையில் சிறப்புற எழுதத் தக்கவர் இவரே என எண்ணினர். திருவருள் இவரிடம் நம்மைக் கொண்டு வந்து சேர்த்தது, மிகமிகப் போற்றத்தக்கது என்று மகிழ்ந்தனர். பழக மிக இனியவராய், பால், வெண்ணெய் போன்ற குணப் பண்புள்ளோராய்த் திகழ்ந்த அவருடைய அலுவல்கள் மிகுதியாக இருந்தமையால், இவர் அங்கு மாதக் கணக்கில் காத்திருக்க வேண்டியதாயிற்று.

சுவாமிகளைப் பற்றியும், சட்டநெறியைப்பற்றியும் விளக்கிக் கூறக் கூற அவர் குறிப்பெடுத்துக் கொண்டார். திருச்சாத்தனூருக்கு ஆண்டவர் எழுந்தருளியபோது, "இங்கே உடையவன் அருட்கொடி நாட்டப் பெற்றுள்ளது" என்று அருளியுள்ளதையும், திரு. நரசிம்மலு சுவாமி, திரு. இராமலிங்கனாரிடம் கூறினர்.

## 2. கொடியேற்றம்

திருச்சாத்தனூர் சுவாமிகள் மிகச் சிறந்த குண நலம் வாய்ந்தவர்கள். அடியார்களைக் கண்டால் மிக மிக மகிழ்வர். அடியார்களே தம் உறவினர் என்ற கொள்கை உடையவர். அடியார்களை அளவு கடந்த பேரன்போடு உபசரிப்பர். அடியார்கள் உண்ண அமர்ந்து விட்டால், அருகில் நாற்காலி யிட்டு அமர்ந்து கொண்டு உணவூட்டும் அற்புதம் மிகமிக இனியது. அனைத்தும் மிக்க சுவையுடன் இருக்கும். எவ்வளவு உண்ணுகிறோம் என்ற அளவே தெரியாமல் அடியார்கள் வயிறு நிரம்ப உண்ணுவர். திரு. சாத்தனூர் சுவாமிகள் ஆண்டவர் நடப்பது போலவே நடந்தும், பேசுவது போலவே பேசியும் அடியார்களை மகிழ்விப்பார்: ஆண்டவர் கூறிய உபதேசங்களையும், சட்டத்தின் நுணுக்கங்களையும் அடியார் கட்கு விளக்குவார்: குற்றம் இருப்பின் எப்படிப்பட்ட வராயினும் தாட்சண்ணியம் பாராமல் கண்டித்துத் திருத்துவார்: அவரைப் போன்ற நல்லவர்களைக் காண்பது அரிது.

அவருடைய நிகழ்ச்சியில் "அருட்கொடியேற்ற வேண்டும்" என்று ஆண்டவர் கட்டளை கிடைத்தது. உடனே இது விவரத்தை நம் அருளன்னையார்க்கும், திரு. கீ. இராமலிங்கனார்க்கும், திரு. நரசிம்மலு சுவாமிக்கும் தெரிவித்து இசைவு பெற்றார். அடியவர்கட்கும் அன்பர்கட்கும் அழைப்பு அனுப்பினார். கொடியேற்றத்திற்கு வேண்டிய யாவும் சிறப்பான முறையில் சேகரித்தார். அவரது மாளிகையின் மீது கொடிக் கம்பம் அமைக்கப் பெற்றது. குருநாதரின் ஆண்டு 80ஆம் பிறந்த நாள் விழாவில், புரட்டாசி மாதம் இரேவதி விண்மீனில், திருச்சாத்தனூரில் அருட்கொடியேற்றம் நடைபெற்றது.

அடியார்கள் அன்பர்கள் உறவினர்கள் யாவரும் முதல் நாளே பெருந்திரளாகக் குழுமினர். இரேவதி நாள் அதிகாலை 3 மணிக்குத் தொடங்கி முன்னவனார்க்குச் சிறப்பாக அபிஷேக ஆராதனைகள் மங்கள வாத்தியங்களுடன் அருட்பாடல் பாராயணத்துடன் நிகழ்ந்தது. நம் அருளன்னையார் அவர்கள் இதற்கென 'இரெட்டியப்பட்டி சுவாமிகள் அருட்கொடி' எனப் பூ எழுத்துக்களால் பொறிக்கப்பெற்ற அழகிய திருக்கொடியை செந்தமிழ் விளக்க வள்ளலார். உயர்திரு கீ. இராமலிங்கனார் அவர்களிடம் தந்தருளினார். அடியவர் பலரும் அன்புடன் போற்ற அவர் மாடிமேற்சென்று, அருட்குருநாதரைப் போற்றிய வண்ணம் 'அரோஹரோ' கோஷத்திடை மங்கள வாத்திய முழக்கத்திடை சூரியோதய காலத்தில் அருட் கொடியை ஏற்றினர். அன்பர்கள் பலரும் ஆரவாரித்தனர். அமரர்கள் மலர் மாரி பொழிந்தனர். ஆகாயத்தில் கருடன் வட்டமிட்டுச் சங்க நாதம் செய்தது. புலவர். திரு. அ. மு. பரமசிவானந்தம் அவர்கள் 'உடையவன் திருக்கொடி பாரீர்' என்ற பாடலை இயற்றி இசைத்து அனைவரையும் மகிழ்வித்தனர். திரு. சாத்தனூர் சுவாமிகள் கொண்ட பேரானந்தத்திற்கு அளவேயில்லை.

அன்று முதல் அவருக்கு **'அருட்கொடி சுவாமிகள்'** என்ற திருப்பெயர் அருளால் அமைந்து விளங்கியது.*

ஸ்ரீ குருநாதர் திருவுருவப் படம் அற்புதமாக அலங்கரிக்கப் பெற்று, மங்கள வாத்தியத்துடன், அடியவர் புடை சூழ அருட்பாடல் பாராயணத்துடன் திருவீதியுலா நடைபெற்றது. அறிஞர்கள் பலர் சொற்பொழிவாற்றினர். திரண்டு குழுமியிருந்த அடியவர் அன்பர்கள் யாவர்க்கும் சிறப்பான முறையில் உணவளிக்கப் பெற்றது.

பின்னர் ஒரு வாரம் கழித்து, திரு. கீ. இராம லிங்கனார் அவர்கள் திருச்சாத்தனூர் அருட்கொடி சந்நிதி சென்று, அக்கொடி நிழலில் அமர்ந்து, நம் அருளன்னையார், திரு. அருட்கொடி சுவாமிகள். திரு. நரசிம்மலு சுவாமிகள் ஆகியவர்களுடன் கலந்து ஸ்ரீ குருநாதர் வரலாற்றினையும், அருட்சட்ட நெறியினையும் விளக்கும் 'வழிகாட்டும் வான் பொருள்' என்னும் அருள் நூலை எழுதினார்.

அந்நூல் காஞ்சிபுரம் குமரன் அச்சகத்தில் இனிது அச்சிடப்பெற்று, பிள்ளையார்குப்பம் ஸ்ரீ அருட்சக்தி அன்னை சந்நிதியில், சிவம்பெருக்கும் சீலர் திரு. சச்சிதானந்தம்பிள்ளை போன்ற பல அறிஞர்கள் முன்னிலையில் உயர்திரு. வி. கல்யாணசுந்தர முதலி யார்அவர்களால் வெளியிடப்பெற்றது.

இந்நூல் வெளிவரவும் அடியவர்களிடம் சென்று சேரவும் அன்னை அவர்கள் கொண்ட பெருமுயற்சி ஏட்டிலும் எழுத்திலும் அடங்குவதன்று.

* அதுமுதல் ஆண்டுதோறும் புரட்டாசி இரேவதியில் சிறப்பான முறையில் அருட்கொடி யேற்றம் நடைபெறலாயிற்று.

அன்னை அவர்களுடைய பெரு முயற்சியாலும் உயர்திரு. கீ. இராமலிங்கனார் அவர்களின் ஆதரவினாலும் ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் சங்கமும், மாணவர் விடுதியும் காஞ்சிபுரத்தில் துவக்க பெற்று, பின்னர் திருவெண்ணெநல்லூர் ரெயில் நிலையத்துக்கருகில் உள்ள அருள் நகர்க்கு மாற்றப்பெற்றன. எட்டாம் வகுப்பு வரை உள்ள அருட்கொடி பள்ளியும் அங்கு திருவருளால் அமைந்து இனிது நடந்துவருகிறது.

## 3. குருபூஜைப் பெருவிழா

சுவாமிகள் அடக்கமான நாளாகிய மார்கழி மாதம் அனுட விண்மீனில் அடியார்கள் தத்தமது இல்லங்களில் ஆண்டவர்க்கு சிறப்புப் பூசையாற்றி அன்னதானம் செய்வது வழக்கம். நம் அன்னையார் இல்லத்திலும், ஆண்டு தோறும் குருபூஜை விழா சிறப்பாக நடைபெறும். முன்தினமே தமிழ் நாட்டின் பல பாகங்களிலிருந்தும் அடியார்கள் வந்து கூடுவர் இரவு உணவு முடிந்ததும் பஜனை, சொற்பொழிவுகள் நடக்கும், ஆண்டவர் திருவுருவப் படத்திற்கு இரவே அலங்காரம் செய்யத் தொடங்கி, விடியற்காலை முடிப்பர்.

குருபூஜையன்று விடியல் மூன்று மணி முதல் அடியவர்கள் நீராடிவந்து நிஷ்டை புரிவர்: பாராயணம் செய்வர்: பூசைபுரிவர், விநாயக மூர்த்திக்குத் திருமஞ்சனம் நடைபெறும். மங்களவாத்தியம் முழங்கிக்கொண்டிருக்கும். வாசலில் இதற்கென அமைக்கப்பெற்ற பந்தலில் நடுவில், ஆண்டவரின் திருவுருவப்படத்தை ஊஞ்சலில் அமர்த்தி, பலகை மீது விநாகயப் பெருமானை எழுந்தருளச் செய்து,



அருள்சக்தி அன்னை இல்லத்தில்
ஆண்டு தோறும் நடத்தும் குருபூஜை விழா 9-1-1975

மலர் மாலைகள் அழகுறச் சூட்டி, சிறப்பான முறையில் ஆராதனை நடைபெறும், பின்னர் உணவு அளிக்கப் பெறும். ஆண்டவர் அருள் அமுதம் போன்ற அற்புத உணவை அனைவரும் அருந்தி மகிழ்வர்.

அடியவர் பலரும் அன்புடன் அளவளாவி, ஐயங்களைத் தெளிவு செய்து கொள்வர். அருட்பாடல்களை இசைத்து அனைவரையும், ஆனந்தக் கடலில் அமிழ்த்துவர். ஆண்டவரின் அருட்பாங்கை அகமுறநினைந்து உருகுவர். அம்மம்ம! இத்துணை நலங்களையும் அடியவர்க்குக் கூட்டுவிக்க எண்ணி, விழா நடத்தி, அருட்பேறு பெறச்செய்யும் நம் அன்னை அவர்களின் தண்ணருளுக்கு ஈடாக எதைக் கூற முடியும்?

அன்னை அவர்கள் எங்கும் நிறைந்திருப்பார்கள் பூஜை சாமான்கள் குறைவற உள்ளனவா என்று பார்ப்பர் உணவு சமைக்கும் இடம் சென்று கவனிப்பர், அடியார்களின் குறைகளைக் கேட்டு ஆறுதல் கூறுவர். அடுத்து நடக்க வேண்டியதைப் பற்றி உரியவர்களிடம் யோசனை கூறுவர். தவத்தில் சிறந்தவர்கள் என்ன என்ன செய்ய முடியும் என்பதற்குச் சான்றாக விளங்குவார்கள். வந்த அனைவரும் அன்னை அவர்களிடம் அருட்பிரசாதம் பெற்றுப் புறப்படுவார்கள் இவ்வளவு அற்புதமான முறையில் யாரால் விழா நடத்த முடியும்! என்றும், இவர்களுக்கு ஆண்டவரிடம் உள்ள அடர்ந்த பற்றுக்கு ஈடு எதைச் சொல்ல முடியும் என்றும் பேசிக்கொண்டு செல்வர்.

# 4. பிணி நீக்கல்

திருவண்ணாமலையை யடுத்த பாலூர் திரு. சுப்புராம அய்யரின் மனைவி கீல்வாத நோயால் பாதிக்கப்பட்டு, எழுந்து நிற்கவும், படுக்கவும் இயலாமல், வலிதாங்க முடியாமல் துயருற்றனர். ஆங்கில மருத்துவம், நாட்டு மருத்துவம் யாவும் பார்த்தும் பயனில்லை. உறவினரான பிள்ளையார்குப்பம் சுந்தரராம அய்யரின் இல்லத்திற்கு அழைத்து வந்தனர். நம் அன்னையாரிடம் காண்பித்தனர். அவர்கள் தம் இல்லத்தில் நான்கு நாள் தங்கச்செய்தனர். எல்லாவற்றிற்கும் காய்ச்சிய நீரே கதி என்றிருந்த அம்மையாரை அருட்சட்ட அநுட்டானத்தில் வைத்து, விபூதி தீர்த்தம் தரவே, அந்நோய் விரைவில் குணமடைந்தது.

அவசர வேலை காரணமாக ஊருக்குச் சென்று 4 நாள் கழித்துத் திரும்பி வந்த திரு. சுப்புராம அய்யர் தம் மனைவியார் வாசலில் நின்றவண்ணம் கூந்தலை ஆற்றிக் கொண்டிருப்பதைக் கண்டு, தாம் காண்பது கனவா நனைவா என்று ஐயுற்றுக் கண்களைக் கசக்கிக் கொண்டு நன்றாகப் பார்த்து நோய் முழுவதும் நீங்கிப் பூர்ண ஆரோக்கியத்துடன் திகழ்வதை யறிந்து, அளவிட முடியாத வியப்படைந்து, ஆண்டவரின் கருணையையும், அன்னையாரின் தவ மகிமையையும் உணர்ந்து போற்றினார் மேலும்; அவரும் அருட்சட்டம் ஏற்று வாழ்ந்தார்.

கீழ் இழிஞ்சிப்பட்டு கிராமத்தில் மணியம் திரு. சுந்தர ரெட்டியார் மனைவி ராஜம் அம்மையார்க்குக் கால்கள். வீங்கி அதிக வலி கொடுத்து வந்தது. நாற்காலியில் அமர்த்தித் தூக்கிச் செல்வார்கள். செல்வந்தர் ஆதலால் எல்லாவித வைத்தியங்களும் செய்தனர். பயன் ஏதுமில்லை நம் அன்னையாரைப் பற்றிக் கேள்வியுற்று, பிள்ளையார் குப்பத்திற்கு அழைத்து வந்தனர். நம் அன்னையார்

அவர்களை அருட்சட்டம் ஏற்கச்செய்து, திருநீறு பூசியதும், விளக்கின் முன் இருள்போல் நோய் உடனே நீங்கியது இதனைப் பலர் அறிந்து வியந்து போற்றினர்.

இதுபோல் எண்ணிறந்த பிணிகள் நம் அன்னையாரின் கருணையால் நீங்கியுள்ளன.

## 5. மனநோய்க்கு மருந்து

எத்தகைய மனவருத்தம் உள்ளவர்களும் நம் அன்னையாரிடம் வந்தார்களானால், அவர்கள் மனதில் உள்ள எல்லா வருத்தங்களும் நீங்கி, பூரணமகிழ்வெய்துவர். மனநோயுற்றவர்களும், மனமயக்கமுற்றவர்களும், மன அமைதி இழந்தவர்களும் நம் அன்னையாரிடம் வந்து, குணமடைந்து செல்வார்கள்.

ஒருசமயம் நல்லாத்தூர் இரெட்டியார் ஒருவர்க்கு சித்த சுவாதீனமின்றி இருந்தது. அவர் தம் மனைவியார் பவுனாம்பாள் தம் கணவரை அழைத்து வந்து, நம் அன்னையாரிடம் தம் நிலைமையைக் கூறினர். நம் அன்னையார், அவர்களை அங்கேயே தங்கச் செய்தனர். நான்கு நாட்கள் ஆயின. ஒருநாள் விடியல் நான்கு மணிக்கு கிணற்றில் ஏதோ பொருள் விழுந்த மாதிரி சப்தம் கேட்டது. ஒருவரும் கவனிக்கவில்லை. பூஜையான பின் ஆகாரம் தர, நல்லாத்தூர் ரெட்டியாரைத் தேடினர். கிடைக்கவில்லை. பிறகு கிணற்றில் மிதப்பது தெரிந்தது. அனைவரும் வருந்தினர். அன்னையார் ஆட்களை விட்டு அவரைத் தூக்கச் செய்து, தரையில் கிடத்தி, திருநீறு பூசச் செய்தனர். ஆண்டவர் அருளால் அவர் உயிர் பிழைத்தெழுந்தது மட்டு மன்றி மனநோயும் நீங்கிப் பூரண ஆரோக்ய மடைந்தனர். அனைவரும் ஆண்டவர் கருணையையும் அன்னையாரின் தவப் பெருமையையும் போற்றிப் புகழ்ந்தனர்.

## 6. திருநாம மகிமை

அருட்சக்தி அன்னையின் திருநாமத்தைக் கூறுவோர்க்கு அச்சமும் கவலையும் அகன்றுவிடும். எந்த நோய் ஆயினும் அன்னையின் திருநாமம் கூறி திருநீறு அணிந்தால் குணமாகும். உடல் நோய் ஆயினும், மனக் குறையாயினும் அன்னையின் திருநாமத்தை உச்சரித்தால் உடனே குறை தீர்ந்து நலமுண்டாகும். மன அடக்கம் வேண்டுவோரும் நிட்டை கூடவேண்டும் என விழைவோரும் அன்னையின் திருநாமத்தை ஓதுவராயின் உடனே கைகூடும். அன்னையின் திருநாமம் இம்மை மறுமை நலங்கள் அனைத்தையும் எளிது கூட்டுவிக்கும் ஓர் ஒப்புயர்வற்ற சஞ்சீவியாகும்.

## 7. அன்னையாய் மிளிர்தல்

மற்றாருக்கெல்லாம் மணிவிளக்காய் வழி விளக்கும் அன்னை அவர்கள், சாந்தம் நிறைந்த சிந்தையோடு, ஆண்டவன் அருள் வெள்ளத்திலே ஆழ்ந்தவர்களாய், பிறவா நெறியைப் பெறுவது உறுதியென்னும் உண்மை கண்டவர் களாய், உடல் எடுத்ததின் பயனையெல்லாம் இவ்வுலகிலே பெற்றவர்களாய், தூய நல் வாழ்வு செய்து வந்தனர் அவர்கள் அனைவர்க்கும் அன்னையாய் மிளிர்ந்தார்கள். தாயின் பரிவோடு உணவூட்டி, ஆறுதல் கூறி இன்முகத்தோடு, யாரிடத்தும் எந்தக் குறையும் நோக்காது அவர்கள் காட்டிய பரிவு அடியார்களை இன்றும் கனிய வைக்கிறது.

யார் எவ்வளவு வேகமாகப் பேசினாலும், குறைகள் கூறினாலும், "மலை கலங்கினும் நிலைகலங்கார் சான்றோர்" என்ற பொன்மொழிக் கேற்ப, சற்றும் பதட்டமின்றி, அமைதியாக அவர்கள் கூறுவதைக் கேட்டு, தக்க வகையில் ஆறுதல் கூறி யருள்வார்கள்.



சென்னையில் திரு. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் இல்லத்தில் நடந்த அர்ச்சனை விழாவில் ஸ்ரீ தாய் கலந்து கொண்ட காட்சி - 1973

அருட்கடலாக விளங்கும் அவர்களின் தோற்றம், ஆண்டவரை நேரில் காணும் பேறு பெறாதவர்களுக்கு ஓர் ஒப்பற்ற கருவூலமாகும்.

## 8. அனைவர்க்கும் புகலிடம்

பெற்ற தாயினும் சிறந்த தாயாய் விளங்கும் அன்னை அவர்கள் அடியார்களுக்கு உற்ற பெருந்துணையாய் என்றும் நின்று நிலவுகின்றார்கள். அன்பின் மிகுதியால் அடியார்கள் நம் அன்னை அவர்களைத் தங்கள் இல்லங்களுக்கு எழுந்தருளுமாறு வேண்டுவார்கள். 'ஆண்டவர் உத்தரவு கிடைத்தால் தாய் வரும்' என அன்னை அருளுவார்கள்.

அவ்வாறு அடியார்களின் இல்லங்களுக்கு நம் அன்னை எழுந்தருளும் முன், அவ் அடியார்களிடம் நிகழ்ச்சிகள் நடக்கும். அன்னையார் எழுந்தருளுவது போலவும், அடியார்களும் அன்பர்களும் உடன் வருவது போலவும், தாம் எதிர் சென்று அழைப்பது போலவும் நிகழ்ச்சிகள் நடைபெறும். அவர்கள் வியக்கும் வண்ணம் அன்னையார், அவர்கள் இல்லத்திற்கு எழுந்தருளி, அருள் பாலிப்பார்கள்.

அடியார்களுக்குப் பிணி உற்ற காலங்களில் அன்னையார்க்குக் கடிதம் எழுதித் திருநீறு அனுப்பச் சொல்லி வேண்டுவர். கடிதத்தை அஞ்சலில் சேர்த்த உடனேயே பிணி நீங்கிவிடும். அதன் பின் அன்னையாரிடமிருந்து திருநீற்றுப் ப்ரஸாதம் வரும்.

குடும்பச் சிக்கலோ, தொழில் முறையில் தொல்லைகளோ, மனதில் குழப்பமோ ஏற்படும் போது அடியார்கள் அன்னையை நாடி வருவர். அன்னையை

வணங்கித் தம் குறைகளைக் கூறுவர். அன்னையாரும் அமைதியாகச் செவி மடுத்து, "எல்லாம் சரியாகிவிடும்" என்று அருளிச் செய்தால், உடனே நலம் உண்டாகும்.

## 9. பேதமற்ற பரிவு

அருட்சட்டம் ஏற்றவர்கள் என்று அறிந்தால் போதும், அவர்கள் எந்த ஊர்? எந்த இனத்தவர்? என்ற பாகுபாடு சிறிதும் இன்றி, எந்த நேரத்தில் வந்தாலும், அன்புடன் வரவேற்று, ஆறுதல் கூறி, உபசரிக்கும் பண்பை வேறு எங்கும் காண இயலாது. குழந்தைகள் பிணி நீக்கவும் பெரியோர் பிணி நீக்கவும், துன்பங்களைப் போக்கவும், திருமணமாகாதவர்க்குத் திருமணமாகவும், மகப் பேறு இல்லாதவர்க்கு மகப்பேறு உண்டாகவும், ஆகப் பல்வேறு விதமான குறையுடையவர்கள் அங்கு வருவார்கள்.

அன்னை அவர்கள் வந்து அமர்ந்ததும், அனைவரும் தத்தம் அநுபவங்களையும் குறைகளையும் கூறுவர். உடனே அன்னை அவர்கள் "உடையவன் பொறுப்பு; எல்லாம் நலமாகும் விபூதி பூசி வரட்டும்" என்பார்கள். அன்னை அவர்களின் அன்பு கனிந்த கண்ணோக்கமே அனைத்து நோய்களையும் நீக்கியருளும் அற்புத ஆற்றலை நேரில் கண்டவர்களே அறிவர்.

அடியவர்கள், பெற்ற தாயிடம் கூடக் கூற இயலாத பல குறைகளை அன்னை அவர்களிடம் தயங்காது கூறிப் பரிகாரம் நாடுவர். அன்னையாரும் அதனைப் பரிவுடன் கேட்டு, உளம் கசிந்து அருள் புரிவார்கள்.

ஆரம்ப காலத்தில் அன்னை அவர்களே பிணியாளர்களுக்கு விபூதி தடவுவதுண்டு. அதற்குத் தடை யேற்பட்டபோது, அருகுள்ளாரைக் கொண்டு அணிவிப்பது வழக்கம். நாள் செல்லச் செல்ல அடியார்கள் வருகை



அருள்சக்தி அன்னைக்கு பாத பூசை செய்து நிற்பர்
சேலியமேடு திரு. இராமசாமி நாயுடு - 1972

அதிகமாயிற்று. தெய்வ பூஜை புரிவது போலவே அடியார்களை உபசரிப்பதிலும் வல்லவர்கள் நம் அன்னையார். எத்தனை பேர் வந்தாலும் சுவையான உணவு எப்படித்தான் படைப்பார்களோ தெரியாது.

ஒரு கூட்டம் பிரஸாதம் பெற்றுக்கொண்டு விடைபெற்றுப் புறப்படும். மற்றொரு கூட்டம் உள்ளே நுழையும். ஏதாவது ஒருபொருள் உடனடியாக வாங்கவும் வசதியில்லாத அவ்வூரில் இவ்வளவு அழகாக விருந்தோம்புகின்றார்களே! இதற்கென்றே இவர்கள் அவதரித்தார்களோ என்று நினைக்கத் தோன்றும். ஆண்டவர் அருள்தான் இவ்வாறு நடத்துகின்றது என்பதை அங்கு பலமுறை சென்றவர்கள் நன்கு அறிவர்.

## 10. இறையருளை மடுத்துத் தரல்

ஏரி நிறைய நீர் இருந்தாலும், ஒரு மதகின் வழியாக வாய்க்காலில் வந்தால்தான் வயலில் உள்ள பயிர்களுக்கு வாழ்வளிக்க முடியும்; அவ்வாறே இறைவன் கருணை எங்கும் நிறைந்திருந்தாலும், அதனை நேரிடையாகப்பெற்று முன்னேற உயிர்களுக்கு இயலாது. குருமூலம் தான் இறையருளை உயிர்கள் பெற்று வாழ்வில் முன்னேற முடியும். குருநாதரிடம் நேரடியாகத் தொடர்பு கொள்ள எல்லா அடியார்களுக்கும் எளிதில் முடிவதில்லை. குருநாதர் கொடுக்கும் குறிப்புகளை அறியவோ, அதன்படி நடக்கவோ தாயின் இன்னருள் வேண்டியிருந்தது. குருநாதரின் திருவருளை வாரி வழங்கும் வள்ளலாக அன்னை. அவர்கள் விளங்கினார்கள். வளரும் பயிருக்கு வகையறிந்து நீர் பாய்ச்சும் உழவனைப் போல் அருள் உபதேச மழையை அடியார்களுக்குப் பொழிந்து அருட்சட்டப் பயிரை அருமையாக வளர்த்தனர். அனைவர்க்கும் கலங்கரை

விளக்கமாக, நேரில்வந்து குறைகளைக் கூறி, நிவர்த்தி செய்து கொண்டு, நல மெய்தத்தக்க வகையில் அன்னையாரின் அருள்வாழ்வு அமைந்தது எனலாம்.

## 11. பக்குவத்திற்கேற்பப் பயன் அருளல்

அன்னை அவர்களை நாடிச் செல்லும் அடியார்கள் ஒவ்வொருவரும், அன்னையார் தங்களிடமே தனி அன்பு கொண்டுள்ளார்கள் என்று எண்ணுவார்கள். தன் மக்களிடம் தாய் காட்டும் அன்பைப் போன்றே அடியார்களிடம் அன்பு காட்டுவர் அன்னையார். தலைசிறந்த சில அடியார்களின் சிர மேல் கரம் சூட்டித் திருவருள் புரிந்துள்ளார்கள். திருச்சாத்தனூரில் சுவாமிகள் அடியார்களுக்குச் செய்ததைப் போன்று, அன்னை அவர்களும் இவ்வாறு அனுக்ரஹம் புரிந்துள்ளார்கள் என்பதை எண்ணி அடியார்கள் பெரு மகிழ்வு கொள்வதுண்டு.

## 12. பம்பாய்ப் பயணம்

ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் மதுரையில் முகம்மதியர் கடையில் பணியாற்றியபோது வியாபார நிமித்தம் பம்பாய் சென்று சிலகாலம் தங்கி இருந்தனர்.

சென்னையில் தியாகராய நகரில் வாழ்ந்து வரும் உயர்திரு. கே. சாம்பசிவ ஐயர் அவர்கள் நம் அருளன்னை யிடம் ஈடுபாடு மிகக் கொண்டவர். அவர்தம் குடும்பம் முழுதும் அருட்சட்டம் ஏற்று நலம்பல பெற்று வருகின்றனர். அவர் தம் இரண்டாவது திருக்குமாரரான திரு. சுப்ரமணியம் வேலை காரணமாக பம்பாயில் வாழ்ந்து வந்தார். அன்னையார், தம் இல்லத்திற்கு எழுந்தருள வேண்டும் என்று அவர் மிகவும் வேண்டிக்



ஸ்ரீ தாய் பம்பாய் நகரில் அடியார்வீட்டு பூசையில் கலந்து
கொண்டபோது குழுமிய அடியார்கள் கூட்டம் - 1972

கொண்டதற்கிணங்க நம் அன்னையாரும் பல அடியார்களுடன் பம்பாய்க்கு எழுந்தருளினார்கள். அங்கு வாழும் மக்கள் பலர் அன்னை அவர்களை வணங்கி, அருளாசி பெற்று, பிணி பல நீங்கி, இன்பம் பெற்றனர். அருட்சட்ட நெறியை அங்கும் பரப்பினார்கள் நம் அன்னை அவர்கள். அவர்தம் பேச்சும் மூச்சும் அதுவே அன்றோ?

## 13. அருள் அற்புதங்கள்

ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகளின் திருக் கரங்களினால் அநேக ஆயிரம் அற்புதங்கள் நடைபெற்றதைப்போன்றே, நம் அருளன்னையார் அவர்கள் திருக்கரங்களால் நடைபெற்ற, நடைபெறுகின்ற அற்புதங்களும் கணக்கற்றவை ஆகும். இந்த அற்புத நிகழ்ச்சிகளை மட்டும் எழுதப்புகின் அது ஒரு தனி நூலாக விரியும், அவற்றுள், ஒரு சில மட்டும் அடியார்கள் உறுதிக்காகவும், நம் அன்னை அவர்களின் பெருமையை உணர்த்துவதற்காகவும் இங்கு குறிப்பிடப் பெறுகின்றன.

### i. சிறுகுழந்தை விழுங்கிய ஆணி வெளி வந்தமை

பெண்ணாகடம் என்ற ஊரில் வைசிய குலத்தைச் சார்ந்த ஒரு அன்பரின் குழந்தை சிறிய ஆணி ஒன்றை விழுங்கி விட்டது. உற்றாரும், மற்றாரும் என்ன செய்வதெனத் தெரியாது கலங்கினர். மருத்துவர்களிடம் சென்றனர். சிறு குழந்தை ஆதலால் அறுவை சிகிச்சை செய்ய இயலாது. கடவுள் அருளால் தான் இது வெளியாக வேண்டும் என்று கைவிட்டனர்.

அருட்சட்ட அடியார்களால் நம் அன்னையின் மகிமையை அறிந்த பெற்றோர் குழந்தையைப் பிள்ளையார் குப்பத்திற்குக் கொண்டு வந்தனர். அன்னை அவர்களிடம்

செய்தியைக் கூறினர். அன்னையார் குழந்தைக்கு நீராட்டச் செய்து, ஆண்டவர்க்கு எதிரில் கிடத்தச் செய்தார்கள். குருநாதரை உறுத்து நினைந்து, குழந்தை வயிற்றில் விபூதி பூசி, தீர்த்தம் உள்ளுக்குத் தந்தனர். சற்று நேரம் கழித்து அனைவரும் வியக்கும் வண்ணம் குழந்தையின் மலத்தில் ஆணி வெளியாயிற்று. பெற்றோர் தம் களிப்பைக் கூற இயலுமா? அன்னை அவர்களின் பெருமையை உணர்ந்து போற்றினர். அன்றுமுதல் அக் குடும்பத்தினர் அனைவரும் அருட்சட்டம் ஏற்றனர்.

### ii. பாம்பு கடித்து இறந்தவர் உயிர் பிழைத்தமை

புதுச்சேரி அருகே உள்ள வில்லியனூரில் திருஞான சம்பந்தம் என்ற ஒரு கணக்குப் பிள்ளை வாழ்ந்து வருகிறார். அவர் மனைவி தேவகி அம்மையாரை ஒரு நாள் கடுவிடப் பாம்பொன்று தீண்டியது. விடம் தலைக்கேறி விட்டது. எத்தனையோ மந்திர தந்திரங்கள் செய்தனர். வாயில் நொப்பும் நுரையும் தள்ளின. இனி பிழைக்காது என்ற நிலை வந்தது. பிள்ளை அவர்கள் மிகவும் கலக்க முற்றிருந்தனர்.

அருகே வாழ்ந்த ஒருவர் நம் அன்னையின் பெருமையைக் கூறி, ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் திருநீற்றால் குணமாகும், பிள்ளையார் குப்பம் செல்லுங்கள் என்றார். உடனே வண்டியில் தூக்கிப்போட்டுக் கொண்டு வந்தனர். நால்வர் பிடித்து உள்ளே கொண்டு போய்க் கிடத்தினர். அன்னையார் அவர்கள் திருநீறு பூசித் தடவிக் கொடுத்தனர். சற்றுநேரத்தில் கால் பெருவிரல் அசைந்தது. கண்கள் திறந்தன. தண்ணீர் கேட்டனர். அருந்த நீர் அளித்ததும் அன்னை அவர்கள் கிணற்றருகில் அழைத்துச்சென்று நீராடச் செய்தனர். பூர்ண குணம் அடைந்த அம்மையாரைக் கண்ட அனைவரும் வியந்தனர்.

அன்றுமுதல் அருட்சட்டம் ஏற்ற அவர்கள் குடும்பம் சீரும் சிறப்புமாய் வாழ்ந்து வருகிறது.

### iii. தோசை பரிமாறினமை

நம் அன்னையார் தம்மை நாடிவரும் அடியார்களுக்கு ஆனந்த மூட்ட, செவிக்கு அருளமுதும், வயிற்றுக்கு அறுசுவையமுதும் வழங்கியருள்வது வழக்கம். தினமும் அளவின்றி வரும் அடியார்கள் அருளும் பொருளும் பெருக ஆசி பெற்றுச் செல்வார்கள்.

ஒருநாள் நண்பகல் ஒரு மணியளவில் சுமார் இருபதுபேர் அடங்கிய அடியார் கூட்டம் ஒன்று பிள்ளையார் குப்பம் அன்னை சந்நிதிக்கு வந்தது.

நம் அன்னை அவர்கள் இல்லத்தில் காலை ஒன்பது மணிக்கெல்லாம் உணவு முடிந்துவிடும். பகல் இரண்டு மணியளவில் சிறிதளவு சிற்றுண்டி அருந்துவர். வந்து இறங்கிய அடியார்களுக்கு சிற்றுண்டி தயாரிக்கத் தாய் அவர்கள் ஏற்பாடு செய்தனர். பிள்ளையார் குப்பத்திற்கு வரும் அடியார்கள் தாய் அவர்களைத் தரிசித்த பின்னரே உணவு கொள்ளுவர். ஆதலால் வந்த அடியார்களில் தாய் அவர்களிடம் நெருங்கிய தொடர்பு கொண்டவர். “நாங்கள் இன்னும் காலை முதல் உணவு கொள்ளவில்லை: எங்களுக்கு அதிக பசி; நாங்கள் வருவதாகக் கடிதம் எழுதியிருந்தோமே” என்றனர். அக் கடிதம் அப்போதுதான் வந்து சேர்ந்தது. “அதனால் என்ன! வாருங்கள் உண்ணலாம்” என்று கூறி, தாய் அவர்கள் அனைவர்க்கும் இலை போடச் செய்தனர்.

அனைவர்க்கும் அதிகப் பசி, தாய் அவர்கள் ஒரு தட்டில் சுடச்சுடத் தோசைகள் கொண்டுவந்து இரண்டு இரண்டாக அனைவர்க்கும் பரிமாறினர். வேகமாக உண்ண உண்ண, மேலும் மேலும் தோசைகள் சுடச்சுடச்

பரிமாறினர். அனைவரும் வயிறு நிரம்ப உண்டனர். ஒரே சமயத்தில் இத்தனை பேருக்கும் எப்படி அத்தனை தோசைகள் சுடச்சுடச் பரிமாற முடிந்தது? அதற்கேற்ற அவ்வளவு மாவு எப்படி வந்தது? அடுப்பு எப்படி வேலை செய்தது? இன்றுவரை அனைவர்க்குமே அது வியப்பாக உள்ளது. தவத்தில் சிறந்தவர்களுக்கு ஆகாதது உண்டோ?

### iv. பந்தல் போடச் சொன்னமை

நம் அன்னையார் இல்லத்தில் பல பணியாளர்கள் இருப்பர். அன்னையார் இடும் கட்டளைகளை அவ்வப் போது நிறைவேற்றுவர்.

சாதாரண மக்கள், நடக்கின்ற செயல்களை மட்டுமே அறிவர். ஞானிகள் முக்காலமும் அறிவர். அம்முறைப்படி நம் தாய் அவர்கள் பணியாளர்களை அழைத்து, வாசலில் பெரிய பந்தல் அமைக்கப் பணித்தனர். காரணம் அறியாது ஆட்கள் திகைத்தனர். ஆயினும் அன்னையாரின் வற்புறுத்தலுக்கு இணங்கி பந்தலை அமைத்தனர். மறுநாள் ஒரு பெரிய பஸ் நிறைய அடியார்கள் பெருங்கூட்டமாக அன்னை தரிசனத்திற்கு வந்து சேர்ந்தனர் அப்பெருங் கூட்டத்திற்கு அப்பந்தல் மிகவும் பயன்பட்டதறிந்து, அன்னையின் மகிமையை அனைவரும் போற்றினர்.

### v. அதிக உணவு சமைக்கச் சொன்னமை

ஒரு நாள் மாலை பூஜை முடிந்ததும், சமையல் தொடங்கும் சமயம் நம் அன்னை அவர்கள், சமைப்பவர்களை அழைத்து, என்றும் செய்யும் அளவைக் காட்டிலும் இருபது பேர்க்கு அதிகமாகச் சமைக்கச் சொன்னார்கள். காரணம் யாதென ஒருவர்க்கும் புரியாமல் திகைத்தனர். அன்னையார் வற்புறுத்தலின் பேரில்

அவ்வாறே செய்தனர்.

அனைவரும் உண்டபின், கூடுதலாகச் சமைத்த அந்த உணவு அப்படியே மிஞ்சிவிட்டது. அனைவரும் என்ன செய்வதென்று புரியாமல் நின்றனர். நன்றாக மூடி வைத்துவிட்டுப் படுக்கும்படி அன்னையார் பணித்தனர்.

இரவில் அகாலத்தில், பதினோரு மணிக்குமேல் இருபது அடியார்கள் வரும் வழியில் உணவு கிடைக்காமல் மிக்க பசியோடு வந்து சேர்ந்தனர். தயாராக இருந்த உணவை அன்னையார் அனைவர்க்கும் பறிமாறினர். வந்த அடியார்கள், "இந்த நேரத்தில் இவ்வளவு பேருக்கும் எப்படி உணவு தயாரித்து வைத்திருந்தார்கள்? நாம் கடிதமும் போடவில்லையே" என்று ஐயுற்றனர். ஆண்டவர் முன் கூட்டியே தந்த குறிப்பினால் அவ்வாறு நடந்து கொண்டார்கள் என்பதைத் தாயன்றி வேறு யார் அறிவார்? இப்படி அநேக அற்புதங்கள் அன்னையார் அருளால் நடந்துள்ளன. மகான்களுக்கு எல்லாம் நடக்கும் என்பது எக்காலத்தும் உண்மையன்றோ?



மனோவாக்கு காயங்கள் மூன்றும் உன்னிடமாக வைத்த நாள் முதற் கொண்டு, வருகின்ற செயல் எல்லாம் உனக்கே பொறுப்பல்லாது எனக்கினி சுமை ஏது? என்று ஆண்டவரிடம் ஒப்படைத்து இந்தப்படி ஏறுகிறார்கள் அடியார்கள். அந்த நம்பிக்கைதான் முதல்படி.

# VII பூரணத்தோடு ஒன்றல்

## 1. இறுதி எச்சரிக்கை

ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகளைத் தம் திருவுள்ளத்தில் தாங்கி, அனைத்து உயிர்களுக்கும் தாயாய், அருட்சட்ட அடியார்களுக்கு அருளன்னையாய், பொறுமையின் பிறப்பிடமாய், குலம் விளக்கும் குணமணியாய், குணமெனும் குன்றேறி நின்ற கோமகளாய் நடமாடும் திருக்கோயிலாய். அபயம் அளிக்கும் அம்பிகையாய், பிறவிப் பெருங் கடலைக் கடக்க வழி காட்டும் கலங்கரை விளக்கமாய்த் திகழும் அன்னை அவர்கள் முக்காலமும் உணர்ந்த முனிவராவர். யார் எந்த இடத்திலிருந்து என்ன எண்ணுகிறார்களோ, அவரவர்களுக்கு உள்ள தேவை என்னவோ, அவற்றை யெல்லாம் இருந்த இடத்திலிருந்தே தம் திருவுளத்தில் அறிந்து அருள் புரியும் உயர் பாங்கு உடையவர்கள்.

இவ்வுலகில் மீண்டும் பிறவாப் பெரு நிலையைத் தாம் அடைய வேண்டும் என்று இளமை முதலே அவர்கள் எண்ணி, அதற்காக உழைத்து "எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியர் திண்ணியராகப் பெறின்" என்ற பொய்யா மொழிப்படி குருநாதர் திருவருளால் அந்நிலையை அடையப் பெற்றவர்கள்.

உடம்பினுள் உத்தமன் கோயில் கொண்டுள்ளதை அறிந்து, உடம்பை வளர்த்து. உயிரையும் வளர்ப்பர் ஞானிகள் என்ற கருத்தின்படி வாழ்ந்த நம் அன்னை அவர்கள், தம் பொன்னார் திருமேனிக்குள் ஒளிர்ந்த ஜோதியைப் பூரணத்தோடு ஒன்றவைக்கும் நாள் வந்து விட்டதை அறிந்தார்கள்.



ஸ்ரீ அருள்சக்தி அன்னை
இரெட்டியப்பட்டி ஸ்வாமிகளின் அடியார்களுடன் எடுத்தது

அச்செய்தியை நிட்டைக் குறிப்புகள் மூலம் அடியார்களுக்கு அறிவித்தனர். நேரிலும் பல அடியார்களிடமும் "தாய் பயணத்துக்குத் தயாராக உள்ளது, வண்டி ஏற வேண்டியது தான்" என்றும், "வேலை முடிந்து விட்டது புறப்பட வேண்டியது தான்" என்றும் அறிவுறுத்தி வந்தனர்.

## 2. அடியவர் கலக்கம்

தாய் அவர்களின் குறிப்பை உணர்ந்த அடியார்கள் ஏதும் புரியாமல் திகைத்தனர் அடியார்களை நேரில் சந்திக்கையில், தாம் அடைந்துவிட்டால் 'அடியார்கள் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்றும், விடியல் நீராட்டத்தின் விழுமத்தையும், நிட்டையின் அவசியத்தையும் எடுத்துக் கூறினார்கள். மகான்களின் கதைகளைக் கூறி, விளக்கம் தந்தார்கள். அடியவர் ஒருவரோ டொருவர் உறவாட வேண்டியதன் அவசியத்தையும் எடுத்துரைத்தார்கள்.

இவையே நம் தாய் அவர்களின் இறுதி எச்சரிக்கை என்பதை அடியார்கள் அப்போது உணர வில்லை. ஒரு சிலர் உணர்ந்தனர். நமக்கு உறும் இடுக்கண்களைத் தீர்க்கும் கண் கண்ட தெய்வமாம் தாய் அவர்கள் அடைந்து விட்டால், இனி நாம் என்ன செய்வோம் என்று கலங்கினர். இந்த எச்சரிக்கை எல்லாம் எப்போதும் போல் தாய் அவர்கள் கூறுகின்றார்கள். இன்னும் நீண்ட காலம் நம்மோடு இருப்பார்கள் என்றே அடியவர்கள் எண்ணினார்கள்.

## 3. எங்கும் நிறையும் தன்மை

அடியவர்களின் கலக்கத்தையும், திகைப்பையும் கண்ட தாய் அவர்கள், "தாய் எங்குபோகும்? இங்கேயே இருக்கும்; ஊன்றிக் கவனித்தால் நன்கு காணலாம். கலங்க வேண்டாம். தற்போது நம் ஆண்டவர் எப்படிப் பேசுகின்றாரோ, வழி

காட்டுகின்றாரோ, அப்படியே தாயும் பேசும், கலங்க வேண்டாம்; தாய் எங்கும் நிறைந்து விளங்கும். பூர்ணமான பரம் பொருளே நம் உள்ளும் உள்ளது: அதுவே எங்கும் நிறைந்தும் உள்ளது, எதுவும் எப்போதும் அழிவது மில்லை: மறைவதுமில்லை, முக்காலமும் உணர்ந்து, இறைவனின் தன்மையை நன்கு உணர்ந்த ஞானிகள் இப்பேருண்மையை நன்கு அறிவர். அதனால் எச்செயலும் அப்பரிபூர்ணத்தின் செயல் என எண்ணி, மனம் வருந்துவதோ, மகிழ்வதோ இன்றி அமைதியாக இருப்பர். நீங்கள் முற்பிறவிகளில் செய்த தவப்பயனால், அருட்சட்ட அடியராகும் பெரும்பேறு பெற்றுள்ளீர். சட்ட அடியவர் எதற்கும் கலங்குவதோ, களிதுள்ளுவதோ கூடாது எல்லாம் உடையவன் செயல் என எண்ணி அமைதிபெறல் வேண்டும்'' என்று அன்னையவர்கள் அடியவர்களுக்கு ஆறுதல் கூறினார்கள்.

தாம் பெற்ற பேரின்பத்தை எப்படியாவது பிறர்க்குக் கொடுக்க வேண்டும் என்று தவித்த தாய் அவர்கள் ஒரு சில அடியார்களுக்கு நிட்டை மூலம் தம் பேரருளைத் தந்தனர்.

## 4. அருள் அமைவு

இவ்வுலகமும், இதைச் சூழ்ந்த பல உலகங்களும், அண்டமும், பேரண்டமும், அதற்கப்பாலும் பரம் பொருளின் ஆணையால் இயங்குகின்றன. எது எதை எவ்வெப்பொழுது எங்கு எங்கு வைக்க வேண்டும். எடுக்க வேண்டும், மறைக்க வேண்டும் என்று அவர்தம் திருவுள்ளத்தில் எண்ணுகின்றாரோ, அதன்படியே அனைத்துச் செயல்களும் நடைபெறுகின்றன. மிக வேகமாகச் செல்லும் காட்டாற்று வெள்ளத்தின் வழியே செல்லும் சிறிய தெப்பத்தைப் போல நாம் உள்ளோம். அதன்



அருள்சக்தி அன்னை ஆஸ்ரமத்தின் முகப்பு தோற்றம்

வழியே செல்வது ஒன்று தான் நமக்குச் செயல். அதுவும் அவனருளால் நடக்க வேண்டும்.

இவ்வாறு நம் கருத்திற் கெட்டாத மாபெருஞ் செயல் ஒன்று நாம் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் நிகழ்ந்து வருகின்றது. அப்பரம் பொருள் உலக முன்னேற்றத்துக்காக, மக்கள் உய்வதற்காக, எந்த வடிவில் எந்தக் காலம் முதல் எந்தக் காலம் வரை எந்த இடத்தில் தாம் திரு அவதாரம் செய்தோ, தம் கணங்களையோ, ஞானிகளையோ, அவதாரம் செய்யச் செய்தோ ஆகவேண்டும் என்று எண்ணுகின்றாரோ அதன்படி உலகின் பல பாகங்களிலும் அவதார நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன.

அவ்வாறு இறையருளால் அவதாரம் செய்த அருட்சக்தி அன்னை அவர்கள் தம் அவதார நோக்கம் நிறைவுற்றமையால் பரிபூரணத்தோடு ஒன்றத் திருவுளம் கொண்டார்கள்.

ரௌத்திரி ஆண்டு ஆடி மாதம் இருபத்தொன்பதாம் தேதி புதன்கிழமை ஆடிப்பூர நன்னாளில் (1980 ஆம் ஆண்டு ஆகஸ்டு பதின்மூன்றாம் நாள்) வெளிமுகமாக அருள் ஆட்சி புரிந்துவந்த அருட்சக்தி அன்னை அவர்கள் அகண்ட பரிபூரண சச்சிதானந்தத்தோடு இரண்டறக் கலந்தனர். உடன் இருந்த அடியவர்கள் கலக்கம் ஏட்டிலும் எழுத்திலும் அடங்கா.

செய்வதறியாது திகைத்த அவர்கள் ஒரு மணி நேரத்திற்குப் பின் அடியார்களுக்கு அருள் மறையாய் அமைந்துள்ள வழிகாட்டும் வான்பொருள் நூலைத் தாய் அவர்கள் திருக்கரத்தில் வைத்தனர். உடனே அனைவரும் வியக்கும் வண்ணம் தாய் அவர்களின் திருக்கரங்கள் அரைமணி நேரம் அசைந்தன. இச்செயலிலிருந்து தாய்

அவர்கள் தம் திருமேனிக்குள்ளேயே அடங்கி உள்ளனர் என்பது தெளிவாக விளங்குகின்றது அன்றோ? வராக உபநிடதத்தில் உள்ளபடி ''ஞானியர் ஆத்மா வெளியேறுவதில்லை. உள்ளேயே அடங்கிவிடும்" என்ற உண்மையை அனைவரும் அறிந்து போற்றினர்.

வெளியூர் அடியவர்களுக்குத் தொலைபேசி மூலமும் தந்தி மூலமும் செய்தியைத் தெரிவித்தனர். செய்தி அறிந்த அனைவரும் கொழு கொம்பற்ற கொடி போன்று துவண்டனர்: வாய்விட்டு அரற்றினர்: பிள்ளையார் குப்பத்திற்கு விரைந்தனர்.

எம் அன்னையை நாங்கள் என்று காண்போம். புன்னகை தவழும் திருமுகத்தை எப்போது காண்போம், அருளுரை கூறும் இனிய சொற்களை எப்போது கேட்போம், தாமரைத் திருவடிகளை எப்பொழுது தீண்டுவோம், குருநாதா எங்கள் தாயை எங்களிடம் இருந்து பறித்துக் கொண்டாயே, இனி எங்களுக்கு வழிகாட்டுவார் யார், நீர் நடத்தும் நிகழ்ச்சிகளுக்குக் குறிப்பும் விளக்கமும் தருபவர் யார்? யாரை அண்டுவோம், யாரிடம் கேட்போம். நடுக்கடலில் கப்பல் உடைந்ததுபோல் எங்களைத் தவிக்க விட்டுவிட்டாயே, என்று பலவாறாய்ப் புலம்பினார்கள்.

அணைகடந்த வெள்ளம் போன்ற அவர்கள் துன்பத்திற்கு எல்லையுண்டோ? தாய் அவர்களை அடக்கத்திற்குச் சிலநாள் முன் சந்தித்த அடியவர்கள் தங்களிடம் தாய் அவர்கள் கூறிய உரைகளைக் கூறி விளக்கம் அறியாமல் விட்டுவிட்டோமே எனக் கலங்கினர். அரவணைத்த திருக்கரங்கள் அசைவற்று நின்றனவே, சுவையோடு அமுதளிக்கும் கரங்கள் சும்மா இருக்கின்றனவே, இனியாரிடம் போவோம் எனக் கலங்கினர், அணி அணியாகத் திரண்ட அடியவர் குருநாதர்

அருட்பாடல்களைப் பாராயணம் செய்தனர். 'இறந்தவர்க்கு இரங்கக் கூடாது' என்ற குருநாதர் கட்டளையை எண்ணிய அடியார்கள் குமுறிக் குமுறிக் கலங்கினர்.

மறுநாள் வியாழக்கிழமை இரவு அபிடேக ஆராதனைகள் செய்து சிறப்பாக அலங்கரிக்கப்பட்ட பூப்பல்லக்கில் எழுந்தருளச் செய்து பூப்பந்தல்கீழ் அமைக்கப்பட்டிருந்த இடத்தில் விபூதி கற்பூரம் இவைகளுக்கிடையில் பூ தேவியின் பொறுமையோடு மிளிர்ந்த தாய் அவர்களை பூ தேவியின் திருவயிற்றில் அடக்கம் செய்தனர்.

தாய் அடங்கிய நாள், கோதைப் பிராட்டியார் அவதரித்த திருநாள் ஆகையால், எல்லா வைணவத் திருத்தலங்களிலும் சிறப்பான விழாவாகும். சைவத் திருத்தலங்களிலும் அம்மனுக்குச் சிறந்த திருவிழா நடைபெறும் நன்னாளாகும். அதேபோல் சமாதிக்கு விசேட பூஜை ஆவணி அவிட்டத்தன்று நடைபெற்றமையால் அதுவும் உலகெலாம் கொண்டாடும் பண்டிகையாக அமைந்ததும் திருவருளால் நிகழ்ந்தன என்பது அறிந்து போற்றத் தக்கதாகும்.

## 5. அடியவர் கடமை

“மகன் தந்தைக்காற்றும் உதவி இவன் தந்தை என்னோற்றான் கொல் எனுஞ்சொல்” என்ற மூதுரைப்படி தாய் அவர்களுக்கு அடியார்கள் ஆற்றவேண்டிய பெருங்கடமை என்ன? தாய் அவர்கள் அடியார்களிடம் என்ன எதிர்பார்க்கிறார்கள்? நம் குழந்தைகள் நம் அருளாணைப்படி அருட்சட்டத்தில் மிகச் சிறந்து இம்மியும் பிசகாது நடக்க வேண்டும் என்பதே அன்னை அவர்களின் அவா. ஒருவருக்கொருவர் மன ஒற்றுமையோடு இனிமையாகப் பழக வேண்டும் என்பது அவர் தம் கருத்து.

அதன்படி நடப்பது தான் அடியார்கள் தாய் அவர்களுக்குச் செய்யும் கைம்மாறு ஆகும். அருளுருவாகிய நம் குருநாதரோடு அமர்ந்து அருவ நிலையில் அனைத்து அடியார்களையும் அருள்கனிவோடு காணும் தாய் அவர்கள் அடியார்களின் செயலைக் கண்டு புன்முறுவல் பூத்த வண்ணம் காட்சி அளிப்பதை மனக் கண்ணால் கண்டு அடியார்கள் மகிழ வேண்டும். இதுவே அடியார்களின் கடமை.

## 6. அருட்பாடல் பொருள் விளக்கம்

### ஓ

ஓம் ஓம் என்பார்: ஓமென்ற சொல் அறியார்:
ஓமென்ற சொல் அறிந்தால், ஓமே அவராவார்:
ஓமென்ற சொல் அறிந்தால், ஓ மில்லா இடமில்லை:
ஓமென்ற சொல் அறிந்த பின், ஒன்று மிச்சமில்லையே.

### ஓம் – என்பதற்குப் பொருள்

உலகம் பிறந்தது ஓமில், ஓம் என்பது பிரம்மம், பிரம்மம் என்பது அரூபம், அரூபம் என்பது நாம தேயம் இல்லாதது. அந்தப் பிரம்மத்தில் உருவான எழுத்து தான் ஓம்.

“அருவுருவாகிய திருவடி தேடிடு மனமே:” என்றார் ஆண்டவர். அப்படி ஒரே பிரம்ம மயமாக இருந்தால் உலகம் எப்படி உஜ்ஜீவிக்கும்? ஒரு நாம ரூபம் வேண்டுமே எனத் தான், பல நாம ரூபங்களாக, ஓமிலிருந்து பல நாமதேயங்களோடு உற்பவித்தார்கள். ஆக, பக்தி ஒன்று; பகவான் ஒன்று; மருந்து ஒன்று; பத்தியம் வேறு, வேறு; அவரவர் உடல் நிலைக்குத் தக்கவாறு என்பது போல், பல மனப்பான்மைகள் இருக்கலாம்.

அதற்குத் தான் ஆண்டவர் ஒரே வழி பிடித்துக் காட்டினார்கள். அந்த அருவுருவத்தில் பிறந்ததுதான் மற்ற உருவங்கள். 'ஓம்' என்பது சிரசு; மற்ற மந்திரங்கள் அதன் அங்கங்கள். ஓமில்லா மந்திரங்களே கிடையாது. அஷ்டோத்தரம், ஸஹஸ்ரநாமம், லக்ஷார்ச்சனை - அனைத்துக்கும் முதல் மந்திரம் 'ஓம்' என்பது தான். ஓம் என்பது பிரணவ சொரூபம். அந்தப் பிரணவத்தில் பிறந்தவர் நமது ஆண்டவர். ஆகையால் தான் - முக்திக்கு வழி காட்டும் காரண குருவாக அவதரித்தார்கள். அந்த வடிவத்தைத் தாய் கண் கூடாகத் தெரிசித்து அனுபவித்துத் தான் தெரிவிக்கிறது.



"மந்திரம் ஒன்றை நினைந்து நினைந்து
மனம்குவி யும்படி சிந்தை தெளிந்து நீ
வாடுவாய் - தினம் - தேடுவாய்"

அப்படித் தேடி, "மற்கடகப் பிடியொத்து நிலைத்திடு" என்று குரங்குப் பிடியாகப் பிடிக்க வேண்டும். அந்த ஒரு மந்திரமென்பது தான் 'ஓம்'. அது தான் நிர்விகற்பம் தரக் கூடியது. அந்த ஓம் என்னும் மந்திரத்திற்கு அளவிட முடியாத பொருள்கள் இருக்கின்றன, அவைகள் கடுமையானவை, ஆகையால் பிறருக்கு அனுபவங்கள் புரிய வேண்டுமே என, சிலவற்றைத் தெரிவித்தது.

தாய் அடைந்தாலும், ஸ்தூலம் மறையுமே தவிர சூக்குமம் மறையாது. ஆண்டவர் தோன்றாத் துணையாக இருந்து அடியார்களுக்கு அருள் புரிவது போல், புரிந்து கொண்டு தான் இருக்கும்; நம்பிக்கை வேண்டும்.

அடியவர்களுக்கு சதா ஆண்டவர் தியானம் இருக்கட்டும். எல்லா நன்மைகளும் செய்து, வாழ்க்கைக்கும் வழி காட்டி, கோருவதும் தருவார்.



"மனமே பெறு துணிவே பெற
க்ஷணமாகிலும் குணமோடிரு
வானமு தத்தினை மகிழ்வாய் - உண்ணும்
தேனமு தத்தினைத் தெளிவாய்"

என்ற ஆண்டவர் அருட்பாடல்படி மனதை ஓர்மைப் படுத்தி தீர்க்கதரிசியாக வேண்டும், அதற்குக்காரணம் நிஷ்டையேயாகும். ஆண்டவர் வழிபாட்டில், முதல் காரணம் நம்பிக்கை, பிறகு நிஷ்டை, நிஷ்டையென்றால் சாமான்யமல்ல, பிரதி நித்தியம் காலை ஸ்நானம் முடிந்ததும் 4 மணிக்கோ, அல்லது இரவில் சயனிக்கும் போதோ, கால்மணி நேரமோ, அரை மணிநேரமோ, முக்கால் மணியோ, இப்படி சாதனம் செய்து வந்தால் முழுமணி தானாக வந்துவிடும், பிறகு இரண்டு மணி நேரம் சுலபமாக இருக்க வரும். அப்படி கை கூடி விட்டால் அதற்கு மிஞ்சின பாக்கியம் வேறொன்றுமில்லை; உலகில் காணக் கூடியது; இது தாயின் அனுபவம்.



"வேத வேதாந்த முணர் மாதவர்கள் அடிதொழாது

விட்டகுறை யல்லாது கிட்டுமோ கிட்டாதோ
சொல்வாய்"

என்றது போல் பூர்வ புண்ணியம் பொருந்தியிருந்தால், கிட்டாததும் கிட்டும். அமையாததும் அமையும். இது தாயினுடைய அனுபவம். பொதுவாக இன்ப துன்பம் ஏற்படுத்திக் கொள்வது மனமே யாகும், உள்ளம் உணர்ச்சிகளுக்கு உருவம் கொடுக்கிறது. பொருள் கற்பிக்கிறது, தனக்கே இயல்பாக உடையதாவும் தன்மையால், ஒன்றிலிருந்து மற்றொன்றை நோக்கிப் பாய்ந்து மனத்தை அலைவுக்கு ஆளாக்குகின்றது. ஆகையால் ஆண்டவரிடம் மனதை ஒப்படைத்து விட்டால் எதற்கும் இடம் தராது.



பிறப்புக்கும் துன்பங்களுக்கும் காரணம் ஆசையே ஆகும். ஆசையை ஒழித்தால், ஆசையின் காரணமான பிறப்பு அற்றுவிடும். பிறப்பு அற்றுவிட்டால், துக்கமென்பது அப்புறப்பட்டுவிடும் என்பது தாயின் சிறந்த தீர்மானம். பொதுவாக உலகப்பகையோ, சுற்றத்தார் பகையோ, ஊரார் பகையோ, இல்லறப்பகையோ, நம் மனம் ஒழுங்காக இருந்தால் எந்தப்பகையும் நேராது. அதற்குத்தான் ஆண்டவர்,

"பாசப் பகையை அறுத்து - 'ஸ்ரீ ஓம்' என்ற

பஞ்சாக்ஷரத்தை நிறுத்து"

என்று பாடி வைத்தார்கள்.

ஒவ்வொருவருக்கும் பா்சம் - சந்தேகம் என்பது விலகுவது சிரமம். அதனால் தான் பல துன்பங்களும், பல சிரமங்களும் ஏற்படுவது இயல்பாகவே இருக்கின்றது. அதுகளை நிலைநாட்டாமல், மனதில் ஆண்டவர் இருக்க இடம் தந்தால், எதுவும் அணுகாது. இது தாயினுடைய அனுபவங்கள்.

'அநித்தியம்' என்று ஒன்றை உணரும் பொழுது தான். அதைப் பற்றிய ஆசை அழியும். பொருள்களின் அநித்தியத்தை எண்ண எண்ண, ஞானம் வளரும். ஞானம் வளர வளர நித்தியத்தில் மனம் நிலைத்து விடும். வாழ்க்கையைத் துன்பமயமாக்குவது மாயையே. இந்த மாயைக்கு நமது மனம் டிக்கெட் கொடுத்து அனுப்பி விட்டால், மிகுதியெல்லாம் இன்ப மயமே. உலகத்தாருக்குத் துன்பம் என்று தோன்றுவது நமக்கு இன்பமாகத் தோன்றும். ஏனென்றால் மனம் மாறாத தன்மையை உடையதாய் இருக்கும் வரையில், அது துன்பத்தை உணரப் போகிறதில்லை.

. . . . . . . . . . . .

## 7. அருள் உபதேசங்கள்

நமது குருநா்தராகிய ஆண்டவர் ஊனக் கண்ணுக்கு மானிட ஜென்ம மாகவும், ஞானக்கண்ணுக்கு சாக்ஷாத் பரம்பொருளாகவும் காண்கிறார்கள்.

❊ ❊ ❊

அடியார்கள் கூடிய வரையில், சக்திக்கு இயன்றவாறு மனோதிடம் கொள்ளவேண்டும். மனோதிடமிருந்தால், சாதனங்கள் கைகூடும். சாதனங்கள் கைகூடிவிட்டால் **அவன்** சந்நிதி தோன்றும். பிறகு அனைத்தையும் உணரலாம். ஆனால் கொஞ்சம் கொஞ்சமாகத்தான் வரவேண்டும்.

உலகத்தில் நமக்குப் பகையாளிகள் யாருமில்லை. நமது ஆசைகளே நமக்கு எதிரியாகும். அதைவிட்டால், ஒவ்வொருவருக்கும் பகையாளிகளே கிடையாது.

❊ ❊ ❊

ஆண்டவர் காட்டும் வழிபிடித்து நடந்தால், அதுவே போதும். அப்படி நடப்பதற்குச் சந்தேகங்கள் சங்கற்ப விகற்பங்கள் முன்னே விடவேண்டும். அந்த இரண்டையும் விட்டால், மற்றவைகளெல்லாம் பையப் பையத் தானே கைகூடிவிடும். இது தாயின் அனுபவம்.

❊ ❊ ❊

நமது ஆண்டவர் காரண குரு. அதில் சந்தேகமில்லை, "ஒரு குருவினிடத்தில் அடைக்கலம் புகுந்தோமே, இனி ஒரு குருவை அடுக்கலாமா?" என்று சந்தேகிப்பார்கள். வேறொரு குருவினிடமிருந்து, நமது ஆண்டவர் வழியை அனுசரிக்கலாம், ஆண்டவர் வழியிலிருந்து வேறொரு குருவினிடம் சென்றால், திரிசங்கு சொர்க்கமாகிவிடும். இது தாயின் அனுபவம்.

❊ ❊ ❊

ஆசானும் ஈசனும் ஒன்றெனத் தெரிந்து கொண்ட பிறகு தான் பக்குவத்திற்கு வரமுடியும். ஆண்டவர் அடியவர்களை முன்னேற்றத்திற்குக் கொண்டுவர, எவ்வளவு சிரமப்படுத்த வேண்டியிருக்கிறது, அதற்காகத்தான் ஆண்டவர் "என்னிடம் அபசாரப் பட்டாலும், என் அடியவரிடம் அபசாரப்படாதே" என்றார். "என்னிடம் அபசாரப்பட்டால் மன்னிப்பு உண்டு. என் அடியவரிடம் அபசாரப்பட்டால், அவர்கள் மூலமாகத்தான் மன்னிப்புப் பெறவேண்டும். என்னால் மன்னிக்க முடியாது" என்றார் ஆண்டவர்.

உலகில் ஒவ்வொருவரும் அனுபவிக்கும் கர்மாக்கள் பல. சாதாரண முறையில், சகல ஜனங்களும் அனுபவிப்பது வேறு. யோகிகள், ஞானிகள், பக்தர்கள் அனுபவம் வேறு. சாதாரண மக்கள் பல ஜென்மாக்கள் எடுத்து வந்து வந்து அனுபவிப்பார்கள். பக்தர்கள் இரண்டுமுறை மூன்றுமுறை வந்து அனுபவிப்பார்கள். யோகிகள் அடுத்தமுறை வந்து மிகுதி கர்மாவையும் அனுபவித்துவிட்டு, ஞானத்தைப் பெறுவார்கள். ஆனால் ஞானிகளோ இதே ஜென்மத்திலேயே அனுபவித்துவிட்டு மோட்சத்தை அடைவார்கள்.

❊ ❊ ❊

ஒரு குடும்பத்தை நியமனப்படுத்தி, திரு நரசிம்மலு நாயுடு சுவாமிகளை தூது வைத்து, அவர் செல்லும் இடமெல்லாம், ஆண்டவர் அவருக்கு முந்திச் சென்று, தமது அருட்பாடலில்,

"கூசாமல் தூது நடந்திடுவான் - அவன்
கொள்ளை யடிக்க வல்ல வண்டி"

என்று தெரிவித்தது போல், ஆண்டவர், அவர்கள் மனப் பிரவேசம் செய்து, இவர் சொல் வார்த்தைகளுக்கு 'எஸ்மார்க்கு' தந்து விஷயங்கள் பெருந்தகை யாரால் நிகழ்ந்து வருகின்றன, அந்த ரகசியம் இன்னதென்ன யாருக்கும் புலப்படாது.

'தெய்வம் மானுஷ ரூபேண' என்பது போல், ஆண்டவருடைய அருள் பரவும் காலம் நெருங்கி விட்டது, அதற்காக திரு. நரசிம்மலு சுவாமிகளை ஆண்டவர் நியமனம் செய்து, சுவாமிகள் சரித்திரம் ஒன்று ஏற்படுத்தி, பெருந்தகையரெல்லாம் சட்டம் ஏற்றுக்கொள்ளும்படிச் செய்து, ஆண்டவர் தெரிவித்த 'டயம்' பிரகாரம், உலகில் சட்ட அனுஷ்டானம் பரவி வருகிறது.

சுவாமிகள் திருவாக்கின் வண்ணம், அடியார்களை மாணிக்கங்களாகப் பொறுக்கி எடுக்கின்றார் சுவாமிகள். அனைவரும் திடபக்தி, வைராக்கியத்தோடும், சுவாமிகள் தெரிவித்த முறை தவறாது நிகழ்த்தி வந்தால், காட்டில் தவம் செய்து அடையக் கூடிய பலனை, ஐயமின்றி நாட்டில் எளிதில் அடையலாம்.

திரு. நரசிம்மலு சுவாமிக்கு வாய்த்த அம்மையாரோ, காரைக்காலம்மையார், திருவள்ளுவர் மனைவி வாசுகி இன்னும் பல உத்தமிகள் சரித்திரம் கவனித்திருக்கின்றோம்: அவ்வண்ணமே அவ்வம்மை எனச் சொல்லலாம். நாடு நகரம் விட்டு, மக்கள் மனுஷ்யாளைவிட்டு, எந்த நாள் இவர் காஞ்சியில் கொண்டு, சிறையில் வைத்ததுபோல் வைத்தாரோ, அன்று முதல் இன்று வரையில் எவ்வளவோ கஷ்டங்களை அனுபவித்துள்ளார்கள்.

அரும்பெரும் பாடுபட்டு அருள் துணைகொண்டு பல பெரியார்களின் ஆதரவைக் கொண்டு சுவாமிகள் திருப்பெயரால் தொடங்கி வைத்த சங்கமும், பள்ளியும், மாணவர் விடுதியும் நன்று வளர்ந்தோங்கிப் பல்லாண்டும் சிறந்து விளங்க ஆண்டவர் அருள் புரிவாராக! அடியார்களும் அன்பர்களும் அதற்குத் தக்கவகையில் ஆதரவு தந்து ஆண்டவர் திருவருள் பெற்று உய்வார்களாக!



வேத ஆகம சாஸ்த்ர இதிகாச புராணங்களைக் காட்டிலும் ஆண்டவர் மந்திரம் பெரிது.

பக்தர்களுக்கு ஆலயத்தில் தெய்வம்: யோகிகளுக்கு ஹிருதயத்தில் தெய்வம்: ஞானிகளுக்கு கண்டதெல்லாம் தெய்வம்.



(அர்ச்சனை செய்கையில் ஒவ்வொரு நாமத்திற்கு முன்னும் 'ஓம்' என்னும் பிரணவத்தை முதலில் சேர்த்துக்கொள்ள வேண்டும்.)

## ஸ்ரீ அருட்சக்தி அன்னையார்
## ஷோடச நாம அர்ச்சனை

அருளே போற்றி, அறமே போற்றி,
தெருளே போற்றி, திறமே போற்றி,
அகமே போற்றி, அறிவே போற்றி,
இகமே போற்றி, எழிலே போற்றி,
தகவே போற்றி, தவமே போற்றி,
புகழே போற்றி, பொலிவே போற்றி,
சத்தே போற்றி, சித்தே போற்றி,
பொருள் விளக்கம்தரு பொன்னே போற்றி,
அருள்வினை வேற்றிடும் அன்னே போற்றி.

ஓம் ஓம் ஓம்

## ஸ்ரீ அருட்சக்தி அன்னையார் அஷ்டோத்ர சதநாம அர்ச்சனை

அருட் சட்டம் வளர் அன்னையே போற்றி
ஆர்வ மிகத்தரும் ஆற்றலே போற்றி
இம்மையும் மறுமையும் என்றுளாய் போற்றி
ஈட்டுமெய்த்திருவின் தேட்டமே போற்றி
உண்மையை விளக்கும் திண்மையே போற்றி
ஊக்கம் உண்டாக்கிடும் ஆக்கமே போற்றி
எமையெலாம் காக்கும் இறைவியே போற்றி
ஏற்ற மிகும்தவத் தேற்றமே போற்றி
ஐம்பொறிகளை வெலும் ஆற்றலே போற்றி
ஒருநெறிக் கீர்த்தமு தூட்டுவை போற்றி

ஓமெனும் மந்திரம் ஓதுவை போற்றி
ஔவைபோல் நல்லுணர் வருளுவை போற்றி
அஃகலில் திருவென் றமைந்தனை போற்றி
கண்பெறக் கருணை காட்டுவை போற்றி
ஙப்போல் எமையாள் பொற்பே போற்றி
சக்தி அனைத்தும் தரவலாய் போற்றி
ஞயம்பட உரைக்குமெய்ஞ் ஞானமே போற்றி
டம்பமில் லாதொளிர் தன்மையே போற்றி
ணகரம் போல்வணக் கிடுவாய் போற்றி
தக்கவர் புகழும் பக்குவம் போற்றி

நன்மை யெலாம்தரும் ஞாயிறே போற்றி
பக்தியின் வடிவாய்ப் படர்ந்தனை போற்றி
மனம் அடங்கப்புரி மாட்சியே போற்றி
யஜ்ஞம் மெய்த் தவமெனும் மஞ்ஞையே போற்றி
ரந்திரம் அறியும் தந்திரம் போற்றி
லங்கணம் ஏற்கும் லாவண்யமே போற்றி
வழியினை விளக்கும் வான்பொருள் போற்றி

அழகருள் என் றுணர்த் தாட்சியே போற்றி
அளவில் மெய்யடியார்க் கரசியே போற்றி
அறத்தின் பயன்என அமைந்தனை போற்றி

அனைவரதமும் தவம் ஆற்றுவை போற்றி
கதிபெற அழைக்கும் கருணையே போற்றி
காணரிதாம் தவக் காட்சியே போற்றி
கிருபை சுரந்திடும் கேளிரே போற்றி
கீழ்மை யெல்லாம் தவிர் மேன்மையே போற்றி
குற்றமும் குணமாக் கொள்ளுவோய் போற்றி
கூற்றினை வென்றொளிர் ஏற்றமே போற்றி
கெடுதியை விலக்கும் கிருபையே போற்றி
கேட்டதெல்லாம் தரும் நாட்டமே போற்றி
கைப்பொரு ளாய்த்திகழ் மெய்ப்பொருள் போற்றி

கொடைவடி வாயொளிர் கொள்கையோய் போற்றி
கோபமே காணரும் குணமணி போற்றி
கெளரிசேய் கருணையைக் காட்டுவை போற்றி
சற்குரு பெருமையைச் சாற்றுவை போற்றி
சாந்தமே வடிவாம் சக்தியே போற்றி
சின்மயம் விளக்கும் செம்மையே போற்றி
சீதநீரின் திறம் செப்புவை போற்றி
சுசிருசி யோடமு தூட்டுவை போற்றி
சூட்சுமம் உணர்த்தும் மாட்சிமை போற்றி
செய்கையைத் திருத்தும் தெய்வமே போற்றி

சேமம் எல்லாம்தரும் நேமமே போற்றி
சைலமொத் துள்ளொளிர் தத்வமே போற்றி
சொத்தரு ளாமெனும் சுருதியே போற்றி
சோர்வனைத் தும்த்விர் தூய்மையே போற்றி
செளபாக் கியம்தரும் தாய்மையே போற்றி

தவம்செயத் தூண்டருட் சக்தியே போற்றி
தாமதியாதருள் தரவேலாய் போற்றி
திருவருள் திருமிகச் சேர்த்துளோய் போற்றி
தீனர்பால் கருணைசெய் ஞானமே போற்றி
துறவுளம் கொண்டொளிர் தோற்றமே போற்றி
தூக்கமில் ஊக்கமாம் ஆக்கமே போற்றி
தெய்வீகம் பழுத்தொளிர் செய்கையோய் போற்றி
தேடரி தாம்பெருஞ் செல்வமே போற்றி
தைரியம் ஊட்டும் நல் தாய்மையே போற்றி
தொழுதுயும் வழியைச் சொலவ்வோய் போற்றி
தோடமே கருதாப் பாடமே போற்றி
தௌர்ப்பாக் கியம்தவிர் சத்யமே போற்றி
நன்மை யனைத்தையும் நல்குவோய் போற்றி
நாதாந்த நாட்டின் நடுவுளோய் போற்றி
நினைக்குமுன் வழங்கும் நேர்மையே போற்றி

நீதியை விளக்கும் ஜோதியே போற்றி
நுட்பம் எல்லாம் உணர் திட்பமே போற்றி
நூல்களின் உட்பொருள் நுவலுவை போற்றி
நெறியினிற் பிறழா நீர்மையே போற்றி
நேம நிட்டையிலே நிலைத்துளாய் போற்றி
நைந்துரு கடியருள் நண்ணுவை போற்றி
நொடியினில் உதவருள் வடிவமே போற்றி
நோக்கம் உள்ளாக்கென நுவலுவை போற்றி
நோற்றலே உயர்வெனச் சாற்றுவை போற்றி
நௌவென விளங்கருள் நாதமே போற்றி

பரிபாஷையின் பொருள் பகருவை போற்றி
பாத்திரம் அறிந்தருள் பான்மையே போற்றி
பிள்ளையார் குப்பப் பெருந்தவம் போற்றி
பீடுசால் நல்லுளம் நாடுவை போற்றி

புனிதரெல்லாம் புகழ் புண்யமே போற்றி
பூரண மானமெய்ப் போதமே போற்றி
பெய்திடு முகில்நிகர் பெற்றியோய் போற்றி
பேதபாவனை தவிர் பெருமையே போற்றி
பைநிறை பொருள்போல் படர்ந்தனை போற்றி
பொற்பெலாம் விளக்கும் சிற்பமே போற்றி 90

போதமாம் அமுதுட் புகட்டுவோய் போற்றி
பௌவம் நீந்தச்செயும் பண்பினை போற்றி
மதிபொழி யமுதுணும் மாண்பினை போற்றி
மாயையை விலக்கும் மகிமையோய் போற்றி
மிடிதவர் மார்க்கம் விளம்புவை போற்றி
மீண்டு உதியாநெறி விளக்குவை போற்றி
முத்தர்கள் போற்றுபுன் முறுவலோய் போற்றி
மூலமந்திரம் உள் முழக்குவோய் போற்றி
மெய்யுணர்வுற வருள் மேதையே போற்றி
மேல்நோக்கம் தரும் விஞ்சையே போற்றி 100

மையல் தவிர்த்தருள் மந்த்ரமே போற்றி
மொழிமனம் செயல்களின் முழுவளம் போற்றி
மோனமாம் கடலினுள் முழுகுவோய் போற்றி
மௌட்டியம் தவிர்த்தருள் வல்லபம் போற்றி
வத்துதத்துவம் நவில் வாய்மையோய் போற்றி
வாசிகண் டருள்திரு வளர்த்தனை போற்றி
விளக்கென எமக்குள் விளங்குவை போற்றி
வீடு பெறப்புரி விபுலமே போற்றி
வெளியினுற் ஒளியுணர் விழுப்பமே போற்றி
வேகம் தவிர்த்தருள் வேதமே போற்றி
வைராக்யம் ஊட்டருள் வண்மையே போற்றி 111

ஓம் ஓம் ஓம்

## அருட்சக்தி அன்னை அகவற்பா – 1

பூமலி உலகில் பொருந்திடு உயிர்கள்
மூவகை மலமும் கழன்று உய்ந்திடுவான்
ஓமொலி யுடனே உலகில் தோன்றி
நாமரூ பங்களால் நாயகற் கண்டு
வள்ளல் அருளால் வந்து உதித்த
கள்ளமில் உள்ளக் குயிலம் மைதன்
மணிவயிறு வாய்த்த மாமணி யாகி
அணிசெய் பாக்கம் அதனில் வளர்ந்தே
ஆதிசங் கரர்தம் ஆசியும் பெற்று
ஓதி உணர உயர்பள்ளி சென்று

சட்டாம் பிள்ளையென அங்கு ஒளிர்ந்து
உட்டிகழ் ஞானம் ஒழிவற ஓங்கி
கருணையும் பக்தியும் கனிவுடன் நிறைந்து
அருள்நெறி உரைக்கும் ஆரணங் காகி
பிள்ளை யார்குப்பப் பெருந்தல மதனில்
இல்லற மேற்றுஇனி துவாழ்ந் திருந்தே
ஒருமக வீன்று ஒளிருங் காலை
திருநெறி யதனைத் திறமுடன் கேட்டு
சாத்தனூர் நம்பி தனிமுயற் சியினால்
ஏத்திப் புகழும் இயற்சட்ட மேற்றே

அருள்நெறி உரைக்கும் அண்ணல் அடிமையாய்
உருள்பிறப் பொழிக்கும் உத்தம வழியை
கருவழி நீக்கும் கண்ணிய நெறியை
சற்றும் வழுவா திருந்தினி தியற்றி

சுற்றமும் வாழ்வும் குருவெனக் கொண்டு
அற்றமில் வழியை அனைவர்க்கும் காட்டி
குருநெறி யதனை குவலயத் தோர்க்கே
வாரி வழங்கும் வள்ள லாகி
தன்னலம் கருதாத் தனிப்பணி யேற்றே
உன்னருந் தவத்தில் ஊக்கம் கொண்டு

நன்னய நிர்வி கற்ப மதனை
பன்னரும் ஆண்டு பணிவுடன் இயற்றி
உன்னத நிலையை அடைந்து உயர்ந்தே
மாநிலம் போற் றும் மாமணி யாகி
தாயென எவர்க்கும் தயாநிதி யாகி
உடலும் உயிரும் ஊக்கம் பெறவே
அடலுடன் உணவும் அருளும் தந்தே
குட்டிபேண் பூனை நிகர்த்த அருளால்
உட்டிகழ் தெளிவை ஊட்டிய மேலோய்
மாசில் ஆடி என விளங்கு உன்னை

காசினி யதனில் அறிவார் யாரே
கருணை மலையாய் பொ றுமை பிறப்பாய்
இல்லற வழியை இனி துகாட் டுநராய்
தவநெறி தனக்குத் தனி விளக் காகி
எண்ணிய ஞான்றே நோய்பல நீக்கி
புண்ணியர் தமக்குப் புதைய லாகி
அண்டினோர் தமக்கு அருமருந் தாகி
ஊன் றிநோக்கு வோர்க்கு உயர்தெய்வ மாகி
மிளிரும் அன்னாய் மேதினி மீதில்
ஆடிப் பூர அணியுடை நாளில்

ஒடுங்கி யமர உயருளம் கொண்டாய்
நின்பெயர் சொல்லும் அன்பர்கள் யாரும்
உன்னத நிலையை அடைய அருள்வாய்
எம்பெரு மாட்டி என் றுனைத் துதித்தே
ஏத்துகின் றோம்உம் இணையடி பிடித்தே
கடைக்கண் செய்து காத்தருள் புரிவீர்
அடைக்கலம் உங்கள் அடிமலர் தனக்கே
வாழ்கஇப் புவியில் வள்ளல்தன் சட்டம்
வாழ்கஇப் புவியில் வளர்அன்னை நாமம்
வாழ்க வாழ்க வளர்அடி யாரே.

ஆண்டவர் சட்டத்தின் மகிமை என்னவென்றால், உலக மக்களுக்குப் பல நோய்களும், பல இன்னல்களும் குடும்பத் தொல்லைகளும் அணுகுகிறது சகஜமே. ஆண்டவர் சொன்னபடி விடியல் நீராட்டம் வேளை தவறாமல் செய்து. நிட்டைக் குறிப்புகளைக் கவனித்து, ஆண்டவர் சொல்படி நடந்து வந்தால், தீராத நோய்களும் இல்லை. தீராத இன்னல்களும் இல்லை.

※ ※ ※ ※ ※

எந்த விஷயங்களுக்கும் ஆண்டவர் காட்டும் நிகழ்ச்சியின் படி நடக்கவேண்டும். அதற்குச் சக்தி இல்லாவிடில், சரித்திரம் பார்த்தாகிலும் செய்ய வேண்டும். அப்படியும் புரியவில்லையென்றால், அனுபவப்பட்டவர்களிடமாவது தெரிந்து கொள்ள வேண்டும்.

## அருட்சக்தி அன்னை அகவற்பா - 2

அருட்சக்தி அன்னையாய் அமர்ந்தருள் செய்வோய்
ஆதரம் பெருக அணைத்தருள் புரிவோய்
இன்னல் பலவும் நீக்கிடும் இயல்போய்
ஈகையின் வடிவாய் ஈண்டருள் செய்வோய்
உன்னிய கருமம் உடனே முடிப்போய்
ஊக்கமும் ஆக்கமும் ஏற்றமும் அளிப்போய்
எண்ணியாங் கெய்த இனிதருள் செய்வோய்
ஏக்கமுடை யடியர் இன்னல் களைவோய்
ஐயம் தீர்த்து அரனடி சேர்ப்போய்
ஒள்ளிய தீமை உடனே ஒழிப்போய்

ஓதுவோர் உள்ளத் தொளிர்ந்தருள் செய்வோய்
ஔஷத மாயிங் கடியருக் கானோய்
எஃகுபோல் உள்ளத் தேற்றம் மிகுந்தோய்
கரைசே ரும்வழி காட்டி யருள்வோய்
ஙப்போல் அடியரை வளைத்தருள் செய்வோய்
சலனமில் உள்ளம் சார்ந்தருள் அரசீ
ஞயம்பட உரைக்கும் ஞானமெய்ப் பொருளே
டம்பமில் வாதொளிர் தங்கமாம் மலையே
இணக்கமோ டடியரை ஈர்த்தருள் செல்வீ
தக்கோர் உள்ளம் தங்கிடும் தலைவீ

நலம்பல நல்கும் நாயக மணியே
பயமெலாம் போக்கும் பண்புடைப் பொருளே
மங்கா தென்னுள் மலர்ந்திடும் மலரே
யமபயம் நீக்கிடும் ஏற்றமிக் குடையோய்
ரம்பமாய் வினைகளை யீர்ந்தருள் செல்வீ
லகுவாய் வினைகள் அழிந்திடச் செய்வோய்

வணங்கிடும் அடியார் வாழ்வான செல்வீ
என்றே பற்பல ஏத்திநிற் கின்றோம்
இயம்பிடும் மறையும் அஃதே புகலும்
ஓதிடும் வேதம் அனைத்தும்நீ ரென்று

ஆதர மாய்உம் அடிகளைச் சேர்ந்தோம்
வேறோர் தெய்வம் இங்கெமக் குண்டோ
போற்றிடும் தெய்வம் நீரே யன்றோ
புகலொணாப் பிறவிப் பெருங்கட லுழந்தோம்
இகலினால் மிகவும் இடுக்க ணுற்றோம்
பிறவிக் கடலின் கலங்கரை விளக்கெனப்
பிள்ளையார் குப்பம் மேவிடும் தாயே
பிறவிக் கடலில் புகஇனி முடியாது
கரையேற்ற எம்மைக் கருது வீரே
தாய்சினந் தடித்தால் தந்தை யணைப்பன்

தந்தை அடித்தால் தாய் உடன் அணைப்பாள்
ஈங்கெமக் குற்ற தாயுந்தந் தையும் நீ
அடித்தது போதும் அணைத்திடல் வேண்டும்
தாங்குதற் கிந்தத் தமியனால் முடியாது
ஓங்கார மாக உள்ளத்தில் அமர்ந்தே
தீங்கான பகைகளைத் தீய்த்துக் கடிந்தே
பாங்காக எம்முளம் பக்குவப் படவே
ஓங்குசற் குருவே உளமதில் உன்னுவீர்
வழிதெரி யாதிங் கலமரு கின்றோம்
வழிகாட்டி யாய்எமை அழைத்துச் செல்வீரே

சட்டத்தின் பேரரு ளாட்சியிங் குமக்கே
திட்டமாய்த் தந்தார் சற்குரு நாதர்
அக்குருபரம் பொருளைக் கூடி மகிழ்ந்திட

மெய்க்குரு வாகஇங் கெமக்கருள் வீரே
கழலிணை பிடித்தோம் கடிந்தாலும் போகோம்
அழலிடு நெய்யென உள்ளம் அயர்ந்தோம்
உடல்பொரு ளாவியை உம்மிடம் தந்தோம்
அடலுடன் காப்பீர் அனையே அம்மா
குவலயம் ஓங்கக் குருஅருள் ஓங்கிட
அவலம் நீங்கி அனைத்துல கோங்கிட

நன்மை பெருகி நல்லோர் உய்ந்திட
தீமை மாய்ந்து தீயோர் மாறிட
ஏம வெற்பாய் இங்கெமக் கருள்வோய்
சேமநிதி யெனநும் சேவடி பற்றினோம்
காமம் அகற்றிக் கழல்தரு வீரே.

ஆண்டவருடைய அருளைப் பெற வேண்டுமானால், திட சாதனம், திட பக்தி, திட வைராக்கியத்தோடு இருக்க வேண்டும்.

※ ※ ※ ※ ※

தாயோ, தந்தையோ, தனயனோ, தம்பியோ யாராயிருந்த போதிலும், அவர்கள் சிரமம் அவரவர்தான் பட்டுத் தீர்த்துக் கொள்ள வேண்டுமே தவிர, வேறொன்றும் செய்ய முடியாது. ஆண்டவர் குற்றால மலைமேல் கடுந் தவம் புரிந்து, அருளைப் பெற்று மக்களுக்கு அள்ளி அள்ளி வழங்குகிறார்கள். மக்கள் அதைப் பெற்று, பத்திரமாக வைத்துக் கொண்டு, கிடைத்த புதையலை எப்படி எப்படி, எந்த எந்த நேரம் எது எது ஆண்டவர் காட்டுகின்றாரோ, அப்படி அப்படி நடந்து கொண்டால், அவர்கள் நினைப் பெல்லாம் நிறைவேறும்.



## அருட்சக்தி அன்னை பதிகம்

பூவார்ந்த வண்டினங்கள் இசைபாடப்
 புனிதவொளி யெங்கும் மேவ
ஓவார்ந்த ஒலிமுழக்கு திரைக் கடற்கண்
 எழுகதிர்போல் உலகில் தோன்றி
பாவார்ந்த புகழ் கொள்குரு வருள்வடிவாய்ப்
 பக்தரைப்பேண் அன்னை பாதம்
நாவார்ந்த துதிபாடித் தொழுது நவை
 தீர்ந்து நலமெய்தி வாழ்வாம். 1

பொருளைநனி விளக்குகுரு பொன்னடியைப்
 பற்றிநிர்வி கற்பம் பேணி
மருள்தவிர்த்து மாஞானக் கனற்பிழம்பாய்
 மன்னுலக மாசு நீக்கித்
தெருள்நிறைநற் சட்டநெறி அடியார்கள்
 செவ்வையுறப் பேணச் செய்யும்
அருளனைபொற் பாதமலர் அன்போடும்
 பணிந்தேத்தி அருள்பெற் றுய்வாம். 2

வள்ளலார் அருளாசி யாற்றோன்று
 குயிலம்மை மகவாய்த் தோன்றி
பிள்ளையார் குப்பம்வேங் கடபதிச்செம்
 மலைமணந்தோர் சேயை நல்கி

உள்ளுருகி நிட்டைபுரிந் தொப்பில்தவம்
பேணிஉயர் நிலைக ளெய்தி
வள்ளலென அடியர்க்கருள் வழங்கும்அருட்
சக்தியன்னை மலர்த்தாள் போற்றி. 3

தேகமதைத் திருக்கோயி லாக்கியதில்
திகழுடையோன் திருத்தாள் போற்றி
மாகமதை மண்ணுலகில் வரவழைத்து
மாதவத்தில் நிறைவு பெற்றுச்
சோகமெலாம் தவிர்ந்தடியார் சுகவாழ்வு
பேணியுயத் துணைபு ரிந்து
பாகெனஉள் ளினிக்கும்அருட் சக்தியன்னை
பதம்பணிந்து பவத்தை வெல்வாம். 4

இருநிலம்நன் றுய்யும்வணம் எம்மதச்சா
ரமும்திரட்டி இனிது நல்கும்
குருபரன்தண் ணருள்வடிவாய்க் குவலயத்தில்
பிறங்கிஅருட் சட்டம் பேணும்
அருளடியர்க் கமைந்தகலங் கரைவிளக்க
மானஅருட் சக்தி பாதம்
மருவுபக்தி யாற்பணிந்து வளங்க ளெல்லாம்
எய்திமுத்தி நலம்பெற் றுய்வாம். 5

அடியவரை அன்போடும் வரவேற்றின்
னருள்நல்கி அமுத மூட்டி
நெடியபிற விக்கடலை நீந்திக்கரை
யேறஅருள் நெறி விளக்கிப்
படியில் இம்மைநல மெய்திப் பரகதிபெற்
றுய்யப் பக்குவம்செய் யன்னை
அடிமலர்கள் அன்போடும் நிதம்பேணி
அருள்ஞான வளம்பெற் றுய்வாம். 6

நோயுறினும் துயருறினும் நுவலரிய
சிக்கல்பல உறினும் அன்பர்
மேயபக்தி யொடும் போற்றிக் கடிதம்எழு
தியதும்நலம் மேவச் செய்யும்
தூயஅருட் சக்தியன்னை அருள்நிலையை
ஒருநாவாற் சொல்லற் காமோ?
ஏயமன உருக்கமுடன் அவர்மலர்த்தாள்
இறைஞ்சிநல மெய்தி வாழ்வாம். 7

சந்ததமும் அடியர்அன்பர் களின்நலமே
கருதித்தனிக் கருணை செய்யும்
அந்தமில்சீர் அருட்சக்தி யன்னைபதம்
அமரர்குழாம் போற்றி உய்வார்
நந்தலிலாத் தவமுனிவர் ஞானியர்நற்
பக்தரெல்லாம் நாளும் போற்றிச்
சிந்தைமகிழ் வுற்றொளிர்வார் தினமும்அவர்
திருவடிகள் போற்றி வாழ்வாம். 8

பத்திமிகும் அடியரைக்கண் ணால்நோக்கிப்
பழவினைகள் பலவும் நீக்கிச்
சத்திமிக மிகவூட்டித் தாரணியில்
துன்பமின்றி வாழச்செய்து
சித்திநலம் பலவழங்கித் தெளிவுமிகப்
பெறப்புரிந்து சிறந்த மோன
முத்தியருள் அருட்சக்தி யன்னைபத
முளரிமலர் போற்றி வாழ்வாம். 9

அன்னையடி மலர்போற்றும் அடியவர்தாள்
நாம்போற்றின் அல்லல் நீங்கும்
அன்னைபுகழ் ஓதடியார் அடியவர்கட்
கன்புசெயின் அருநோய் தீரும்

அன்னையருள் எய்தடியார் அடியவருக்
கடியர்பதம் அருள்மிக் கூட்டும்
அன்னையடி யவர்க்கடியார்க் கடியர்க்கடி
யார்க்கடியேன் ஆவேன் நன்றே. 10

போற்றி அருட் சக்தியன்னை புகலரிய
பெரும் புகழ்சால் புனிதப் பாதம்
போற்றி அருட் சக்தி யன்னை புரியும் உயர்
மெய்த்தவத்தின் பொலிவார் ஞானம்
போற்றி அருட் சக்தி யன்னை போதாந்த
வேதாந்தப் புனிதப் பாடம்
போற்றி அருட் சக்தியன்னை பொருவில்தனிப்
பெருங்கருணை போற்றி! போற்றி! 11

* * *

திருவார் திரு. அருட்சக்தி அன்னை அவர்களின் திருக்கரங்களால் எழுதப்பெற்ற எழுத்துகளைப்பலரும் என்றும் கண்டு போற்றத் தக்கவகையில் அமைக்க வேண்டும் என்ற பல அடியார்களின் விருப்பத்திற்கு இணங்க இங்கு அச்சிடப்பெற்றுள்ளது.

நம் அருளன்னை அவர்கள் தெலுங்கு மொழியில் நிறைய பாண்டித்யம் பெற்றவர்கள் ஆதலால் அவர்களின் தமிழ் எழுத்துக்களில் சில மாறுதல்கள் இருக்கலாம் என்பதை அன்பர்கள் கருத்திற்கொள்ள வேண்டும்.

எதுவும், ஏட்டில் சர்க்கரை யென்றால் நாக்கில் இனிக்காது. அதுபோல் சிட்டிகையாவது நாவில்பட்டால் தான் அதன் சுவை காணமுடியும். அவரவர்கள் சக்திக்கு இயன்றவாறு அனுபவித்து ஒருவருக்கொருவர் ஸந்திக்கும் டயம் ஆண்டவருடைய அனுபவங்களைப் பற்றி கலந்து பேசி, மனம் திடப்படுத்திக்கொள்ள வேண்டும். தைரியமாக மனம் சளைக்காமல், எதுவரினும் ஆண்டவரிடம் ஒப்படைத்து, தைரியமாக நடத்த வேண்டும். குற்றங் குறையிருப்பினும் ஆண்டவரிடம் முறையிட்டு நிவர்த்தி செய்துக்கொள்ள வேண்டும்.

முக்திப்பேறு அடைய வேண்டுமானால்,
நம்ம குருநாதன் வழிதான் சுலபமானது.

❋ ❋ ❋

அவரவர்கள் எவ்வளவுக் கெவ்வளவு தாயின் ஞாபகமிருக்கிறதோ—ஸமாதி சென்றாலும் ஸூக்மத்தில் -தாய்-பேசும். தற்போது ஆண்டவர் எப்படி பேசுகிறார் அது போல்-தாய்-பேசும். ஆனால் ஆண்டவர் வழியை நெறிதவறாமல் மனோதிடமாக நடத்த வேண்டும்.



## ஸ்ரீ அருட்சக்தி அன்னையார் போற்றிப் பதிகம்

உலகுயிர் வகைஉயர் உண்மை யுணர்ந்தருள்
வாழ்வு புரிந்துய்ய
அலகில் பராபர வொளியை விரித்தருள்
ஆனந்தச் சுடரே!
இலகு விணோருல காவென இன்னருள்
அமுது சுரந்தருள் வோய்!
நிலவு மனோலயம் அருள எழுந்தருள்
நின்மலையே! போற்றி 1

தேக மதைத்தளி யாக்கி அருட்பொலி
வோடு திகழ்ந் தருள்வோய்!
ஏக பரம்பொரு ளாம்குரு பாதத்
திணைந்து பொலிந்திடுவோய்!
வேக மெலாம்தவிர்த் தெங்களை யாண்டருள்
வேத விழுப் பொருளே!
கோக னகப்பதம் போற்றிஉய் யப்புரி
கோமளமே! போற்றி. 2

காலம் அனைத்தும் கடந்தொளி ரும்கரு
ணாகரி!நின் னுயர்வார்
சீலம் அனைத்தும் தெரிந்து வழுத்தித்
திருந்திஉய் யற்கறியோம்
ஞாலம் திருந்திஉய் யும்படி நன்னெறி
நவில்நளி னாம்பிகையே!
கோலங்கள் காட்டி உளத்துட் குலாவு
குணத்தரசீ! போற்றி. 3

பண்களி கூரக் குயிற்குர லில்நனி
குருமணி பாடுகையில்
விண்களி கூரமெய்ப் பக்தி யினோடினி
தெழுதிய வித்தகி யே!
மண்களி கூர மகோன்னத நிலையினில்
மன்னிய பொன்னுருவே
கண்களி கூரநற் காட்சி யளித்தெமைக்
காத்தருள்வோய்! போற்றி. 4

பத்திநன் றிவ்வுலக கத்தவர் எய்தப்
பரிந்தருள் பாரதி நீ
சத்தி உயிர்த் திரள் பெற்றுய்யு மாறு
நடத்திடு சாரதி நீ
புத்தியை நன்று திருத்தி அருட்பதப்
போதருள் புங்கவி நீ
சித்தி யனைத்துமொன் றாகித் திரண்டொளிர்
சிற்பரையே! போற்றி. 5

இத்தரை மீதுநின் நாம மெணின்பிணி
யாவும் அகற்றுவை நீ
சித்தி நகர்ப் பிள்ளை யார்குப்ப மேவிய
தேவி மனோன்மணி நீ
முத்தர்கள் வாழ்த்திடும் உத்தம சக்தி
யெனத் திகழ் முழுமணி நீ
நித்ய நிராமய நிச்சல நிர்ப்பய
நிஷ்களமே! போற்றி 6

ஆரண காரண மாகி யொளிர்ப்ரண
வாட்சரத் தொன்றிடுவோய்!
காரண காரிய மாதி கடந்த
கதிக்கெமை யீர்த்தருள் வோய்!
தாரணி யேஉயர் வானுல காய்ப்பொலி
யப்புரி தற்பரையே!
பூரண ஞான வொளிப் பொருளாய்த் திகழ்
பொற்புடை யோய்! போற்றி. 7

அண்டம் அனைத்தும் உண்டாக்கிப் புரந்தருள்
அற்புத மெய்பொரு ளைக்
கண்டரு ளின்மய மாகிக் கனிந்தொளிர்
காருணி யத்துருவே!
அண்டரும் மாதவரும் தொழ மெய்யடி
யார்கட் கருள் திருவே!
புண்டரி கப்பதச் சேவை கொடுத்தருள்
பூரணியே! போற்றி. 8

முற்பிறவிப்பயன் என்றடி யார்முன்
முளைத்தொளிர் கற்பகமே!
உற்பவம் மாரண மாதி யொழித்தெம
துட்பொலி ஓமுருவே!
சொற்பொருளைத் தனைக் குள்ளும் ஒளிர்ந்தருள்
தூய புராதனியே!
கற்பனைக் கெட்டரி தானநின் தூயபொற்
கமல பதம் போற்றி. 9

சட்ட மெனத்திகழ் சற்குரு செந்நெறி
தாரணியிற் பரவ
துட்டர் களும்மிகு தூய்மை பெறப்புரி
சுந்தர மந்திரமே!
அட்ட திக்கும் புகழ் செப்பிப் பராவ
அமர்ந்தருள் ஆரணங்கே!
உட்டிகழ் ஞான வொளிச்சுட ராயொளிர்
உத்தமியே போற்றி. 10

வேதமும் ஆகம மாதியும் ஓதரி
தான வியன் பொருளை
போதக சற்குரு நாமம் வழங்கிடும்
என்று புகன் றருள்வோய்!
ஆதர வாய்அடி யார்களுக் கின்னருள்
அமுதம் வழங்கிடுவோய்!
மாதய வோடென் மனத்தமர்ந் தேதவ
வாழ்வருள் வோய்! போற்றி. 11

சந்தத மும்தவ வாழ்வு புரிந்தருள்
சத்துவச் சித்துரு நீ
பந்தமொர் அணுவள வேனுமிலாதொளிர்
பரம பவித்திரை நீ
சிந்தையும் வாக்கும்நற் செய்கையும் சற்குரு
சேவடிக் காக்குவை நீ
அந்தமும் ஆதியும் ஒன்றுமிலா அருட்
சக்திநின் தாள் போற்றி 12

கற்றவர் கல்விகல் லாதவர் யாவரும்
கருணை பெறப் புரிவோய்!
அற்றமில் மெய்த்தவம் ஆற்றிநற் பேரருள்
ஆட்சி புரிந்திடுவோய்!
நற்றவ மிதுவரை நாடா தவரும்
நலம்பெற நன்றருள் வோய்!
சுற்றமும் வாழ்வு மெனத்திகழ் அற்புத
ஜோதி மணீ! போற்றி. 13

## வாழ்த்து

வாழ்க வாழ்க வாழ்க ஞான
தேசிகன்சீர் வாழ்கவே
வாழ்க வாழ்க சட்ட மார்க்கம்
வையகத்தில் வாழ்கவே
வாழ்க மாணருட்சக் தித்தாய்
வண்பதங்கள் வாழ்கவே
வாழ்க சட்ட நெறியைப் பேணும்
அடியர் வாழ்க வாழ்கவே.

## மங்களம்

மங்களம் மங்களமே - என்றும் எங்கும்
மங்களம் மங்களமே.

அங்குச பாசமேந்தும் ஐங்கர மூர்த்திக்கு
பொங்கு காவிரி நீரைத் தந்த புராதனர்க்கு
துங்கரெட் டியப்பட்டிக் குருமுன்னர் தோன்றிறைக்கு
மங்கள மார்மதுரை தங்கும் பரிபூர்ணர்க்கு
(மங்களம்)

ரெட்டியப் பட்டி நக ரில்தோன்று தேசிகர்க்கு
மட்டில் தவம்குற் றாலத்தில் செய்த மாதவர்க்கு
சட்டமென் றருள்நெறி தந்த தகவாளர்க்கு
இட்டமோ டடியாரை என்றும் காத் தருள்வோர்க்கு
(மங்களம்)

பிள்ளையார் குப்பநகர் பிறங்கும் பராபரைக்கு
வள்ளல் குருதாள் போற்றி மாதவம் செய்தாயார்க்கு
உள்ளம் குளிர்ந்தடியார்க்(கு) உதவிடும் உத்தமிக்கு!
அள்ளியருள் வழங்கும் அருட்சக்தி அன்னையார்க்கு
(மங்களம்)

நன்றருட் சட்டநெறி நாளும்பே ணடியார்க்கு
என்றும் அருள்துணையை நம்பி இருப்பவர்க்கு
குன்று நிகர்வினையைக் குமைத்தருள் கூட்டன்பர்க்கு
பொன்றலில் பூர்ணமுத்தி யெய்தும் புனிதர்கட்கு
(மங்களம்)

ஆண்டவருடைய தீர்த்தமும் விபூதியும், "இஞ்ஜக்ஷன்கூட இவ்வளவு சீக்கிரம் வேலை செய்யாது" என்று சொல்லும்படி, அவ்வளவு விரைவில் நோய்களை குணப்படுத்தும். அனைவரும் கண்டு வியப்பார்கள்.

எவரெடி அச்சகம், தி. நகர், சென்னை - 17.
போன் : 8252271

"அடியார்கள் முக்கியமாக நிஷ்டையை அவரவர்களுக்கு இயன்ற வரையில், காலை ஸ்நானம் முடிந்ததும், அல்லது, இரவில் படுக்கும் முன்போ, இரண்டு மணி நேரத்திற்குக் குறையாமல் இருந்து வர வேண்டும். அதுதான் கர்ம விலக்கம். அதிலிருந்துதான் எல்லா வைபவங்களும் பெறல் வேண்டும். வாழ்க்கைக்கு வழிகாட்டுவதும் அது தான். மோட்சத்திற்கு வழி காட்டியும் அதுதான். அருளும், பொருளும் அள்ளித் தருவதும் அதுதான் பல நாட்களாக இறைவழியில் இருந்து வருகின்றோமே: ஒன்றுமே தோன்றவில்லையே என எண்ணாது மனம் சளைக்காமல் இருந்து வந்தால், ஒரு நாளைக்கு ஒரு செகண்டில் அருளை அள்ளித் தருவார்கள். அப்படிப் பெற்றால், சுலபமாகப் பெறலாமே தவிர, சாஸ்த்ர புராணங்களோ, தத்துவ ஆராய்ச்சிகளோ செய்து, ஒரு பதவிக்குப் போக வேண்டுமென்றால், ஆராய்ச்சி செய்து கொண்டே இருக்க வேண்டியது தான்."

... அருள்சக்தி அன்னை வாக்கு.